உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| தொகுதி | பிரஜோற்பத்தி௵ ஆவணிமீ கஉ | பகுதி |
|---|---|---|
| 17 | 1931௵ ஆகஸ்ட்டுமீ 17உ | 2 |


## கடவுள் வணக்கம்.

தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையிலே நடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே யடியிலேமேற்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே யலையாமல் அறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற அன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்தி லேயுனிருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளும் அருள்வையோ
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெண்ணுமையே. (1)

---

திகையாதோ எந்நாளும் பேரா னந்தத்
தெள்ளமுதம் உதவாமல் திவலைகாட்டி
வகையாக அலக்கழித்தா யுண்டு டுத்து
வாழ்ந்தேன் நான் இரண்டுகால் மாடுபோலே. (2)

---

எக்கலையுங் கற்றுணர்ந்தோ மென்றவர்க்கும் சம்மதஞ் சொல்
வக்கணையால் இன்பம் வருமோ பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் மாதர் மையல் நீக்கித் திருவடித் தாமரைகளில் மனஞ் செல்லுமாறு அருள்புரிய வேண்டும் என்று அம்பிகையை வேண்டுகின்றார்.

(இ-ள்) வளம் பொருந்திய தேவை நகர்க் கரசியே! மலையரசனுக்கு இரண்டு கண்மணியாய் அவதரித்த மலைவளர் காதலிப் பெண் உமையே! வலிய மடமங்கையரின் வஞ்சகத்திலும், வாயின் வெட்டு மொழிகளிலும், சிறிய இடையிலும், நடையிலும், சேல்மீன்போன்ற கண்களிலும், பால் போன்ற இனிய மொழிகளிலும், பிறைபோன்ற நெற்றியிலும், அந் நெற்றியி லிட்ட பொட்டிலும், அவர் கட்டிய பட்டாடையிலும், பூசிய வாசனைப் பொடியிலும், பாதங்களிலும், மார்பில் இறுமாந்து நிற்கும் கொங்கைகளிலும், நிற்கின்ற நிலையிலும் புத்தியைப் புகவிட்டு மனம்போன போக்கிலே உழலா மல், ஞான மார்க்கத்திலும், பொறுமையிலும், உன் தொண்டர் குழாத்திலும், நிலைபெற்ற அன்பிலும், மயக்கமற்ற உண்மை நேயத்திலும், உன் இரு திரு வடிகளின் அளவிலும் அடியேன் மனம் செல்லும்வண்ணம் உனது திருவருளை யும் தந்தருள்வாயோ? என்பதாம்.

காமக் கிழத்தியர்களின் அங்கம் முதலியவற்றில் மோகம் வைத்தலினால் பலகேடுகள் விளையும் என்பார் இவ்வாறு விவரித்துக் கூறினார். தெட்டு—காமுகரை மயக்கும் எத்து. வெட்டு—அன்பின் மிகுதியால் கடுமைக் குறிப் புத் தோன்றப் பேசும் சொல். பாலொத்த மொழி—பாலின் சுவைபோலும் சுவை வாய்ந்த மொழி. பொட்டு—திலகம்.

2. இதனால் திருவருட்பேறு முழுதுங் கிடைக்கவில்லை என்று ஏங்கு கின்றார்.

(இ-ள்) என் மனமானது மயங்காதோ? எக்காலமும் பேரின்பமாகிய தெளிந்த அமுதத்தை முழுதுங் கொடாமல் ஒரு துளி காட்டிப் பலவிதத்தி லும் அலக்கழிப்புச் செய்துவிட்டாய்! நானும் ஒன்றும் கவனியாமல் இரண்டு கால் மாடுபோல் உண்டும் உடுத்தும் வாழ்ந்துவிட்டேன் என்பதாம்.

வானத்தில் மின்னல் அடிக்கடி தோன்றி மறைதல்போல் ஒவ்வொரு சமயத்தில்மட்டும் திருவருள் தோன்றித் தோன்றி மறைதலின் திவலைகாட்டி எனவும், பூரணமாய் என்றும் திருவருள் விளங்காமையின் திகையாதோ என வும், திருவருளை அறியும் அறிவிருந்தும் அறிந்து கொள்ளாமையால் மாடுபோல் வாழ்ந்தேன் எனவுங் கூறினார்.

3. இலக்கியம் இலக்கணம் தருக்கம் முதலிய எல்லா நூல்களையும் ஐயந் திரிபறக் கற்று அவற்றின் பொருளனைத்தும் நன்கு அறிந்திருக்கிறோம் என்று அகங்கரித்து, கேட்பவர் யாவருக்கும் தக்க சமாதானம் சொல்லுகின்ற விற் பத்தியால் சுகம் வாய்க்குமோ? என்றபடி—(மெய்ஞ்ஞான நூல்களை வாசித்து அவற்றின்படி நடக்கவேண்டும் என்பது கருத்து)

---

மரணத்திற்குப் பின் மனிதர்களுடைய கதியானது அவர்களுடைய பிர விர்த்திகளை அநுசரித்தவையாயிருக்கும்.




# மதுவிலக்கு.

அறிவை அழிக்கும்; செயல் அழிக்கும்;
அழியா மானந் தனை அழிக்கும்;
செறியும் அறிஞர் மதியாத செருக்கை
விளைக்கும்; என்றானும்
முறியும் வெறுப்பு மிக விளைக்கும்;
முனிவு விளைக்கும்; பகையஞ்சாக்
குறிகள் விளைக்கும்; நகைவிளைக்கும்
கொள்ளேல் கள்ளுண்டலை மைந்தா!

—விநாயகபுராணம்.

கள்ளுண்ணும் மாந்தர் கருத்து அறியார். கள்ளுண்பார்க்குக் கதி இல்லை. ஐம்பெரும் பாவங்களுள் கள்ளுண்ணல் தலைசிறந்த பாவமாகும். காரணம் என்ன? ஏனைய நான்கு பாவங்களும் தோன்றுதற்குக் கள் தூண்டுகோலாகி ஆக்கம் அளிக்கின்றது. பெரும்பாலும் மது மயக்கத்தினாலேயே மக்கள் எல்லாத் தீமைகளையும் செய்யத் துணிவு கொள்ளுகின்றனர். நாட்டில் நிகழும் கொலைகட்கும் கொள்ளைகட்கும் கள்மயக்கம் காரணமாயிருப்பது கண்கூடு.

குடிப் பழக்கம் "தோட்டி முதல் தொண்டைமான்" வரை வேரூன்றிக் கிடக்கிறது. இவ்வுண்மையை எளிதில் மறைப்பதற்கில்லை. ஆசாரம் நிறைந்த நமது அருமைத் திருநாட்டில் இன்னும் குடிகெடுக்கும் குடிப்பழக்கம் இருந்து வருவது வருந்தத்தக்கது. அறிவிழக்க அரும்பொருள் கொடுக்கும் அற்ப மனப்பான்மை மக்களைவிட்டு அடியோடு நீங்கும் நாளே நமது விடுதலைக்குரிய நன்னாளாகும்.

நமது நாட்டில் கோடிக்கணக்கான மக்கள் வறுமை, பிணி, அறியாமைகளில் மூழ்கிக் கிடக்கின்றனர். இதற்குரிய காரணம் வேறு

தேவைகள் குறையும் அளவுக்கே தெய்வத்தன்மை அடைவோம்.

இருப்பினும் குடியும் ஒரு முக்கிய காரணம் என்பதில் ஐயம் இல்லை. மதுப்பேய் ஏழைமக்களைத் துன்புறுத்தும் காட்சி மிகவும் பரிதாப காமானது. இவ்வேழைகள் நாள்முழுதும் நெற்றி வியர்வை நிலத்திற் சொட்ட அரும்பாடு படுகின்றனர். அற்ப ஊதியம் பெறுகின்றனர். அதை என்ன செய்கின்றனர்? நாளெல்லாம் பட்டினி கிடந்து மாலையில் தங்கள் வருவாயின் மூலம் அரைவயிற்றுக் கஞ்சியேனும் குடிக்கலாம் என்று ஆவலுடன் எதிர்பார்க்கும் மனைவிமாரிடங் கொடுக்கின்றனரா? மக்களிடங் கொடுக்கின்றனரா? இல்லை! இல்லை!! அந்திவேளையில் புளித்த நாற்றக் கள்ளுக்குக் கொடுக்கின்றனர்; குடிக்கின்றனர்; நாணின்றி ஆடுகின்றனர்; பாடுகின்றனர்; தெருவில் படுத்துப் புரளுகின்றனர்; வம்புச்சண்டைகள் வளர்க்கின்றனர்; வீடுகட்குச் சென்று மனைவி மக்களை அடிக்கின்றனர்; உதைக்கின்றனர்;—இக்காட்சிகள் நாடெங்கும் நாடோறும் நடைபெற்றுக்கொண்டே வருகின்றன. குடியர்கட்குத் தங்களைப் பற்றியோ, தங்கள் பெண்டு பிள்ளைகளைப்பற்றியோ, உணவைப்பற்றியோ, உடைகளைப்பற்றியோ, வீட்டைப்பற்றியோ, வாழ்க்கையைப்பற்றியோ ஒரு சிறிதும் கவலை இல்லை. உலகில் உயிரோடிருக்கு மளவும் நான்கு பேரைப்போல் மரியாதையாய்—மானத்தோடு வாழவேண்டுமே என்ற எண்ணமும் கொஞ்சமேனும் இவர்கட்குத் தோன்றுவதில்லை. மற்றவர்களின் ஏச்சும் பேச்சும் இவர்கட்கு லக்ஷியம் இல்லை. குடிப்பதற்குமுன் சாதுக்களாயும், யோக்கியர்களாயும், மானம் வெட்கம் உள்ளவர்களாயும் காணப்படுவோர் குடித்தவுடன் விலங்கினத்தினும் கொடியவர்களாகி விடுகின்றனர். கள்ளுண்டவனைக் கண்டால் இல்லாளும் வேண்டாள்-ஈன்றெடுத்த தாயும் வேண்டாள். பிறரும் கைகொட்டி நகைத்து இகழ்வர். கள்ளுண்டு வாழ்பவன் குடி உள்ளது போன்று இல்லாமல் கெடும். "எஞ்ஞான்றும் நஞ்சுண்பார் கள்ளுண்பவர்" என்றார் வள்ளுவனார். கள் நஞ்சினும் கொடியது என்பது கம்பர் கருத்து. காரணம் நஞ்சு கொல்லுதல் மாத்திரம் செய்யும், நரகினை நல்காது. கள்ளோ குடிப்பவரையுங் கொன்று, அவர்தம் குடும்பத்தையுங் கொன்று, இறுதியில் நரகவேதனையும் தந்து விடுகின்றது. ஆதலால் "கள் விலை பகர்வோர், கள்ளினை நுகர்ந்தோர், கள் அருந்துதற்கு உடன்படுவோர், கள் அருந்தினரை மகிழுநர்" முதலிய எல்லாரும் நரகில் கற்பகாலங் கிடந்து அழுந்துவர் என்பது பெரியோர் கொள்கை.

ஈண்டு கள் என்றது சாராயம் முதலிய மதுபான வகைகள் எல்லாவற்றையும் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். தமிழகத்தில் குடிப்பழக்கம் ஒரு சார் மக்களிடைப் பன்னெடுங் காலமாகவே இருந்து வருகிறது. பாணர் முதலிய இசைவல்லோர்க்குத் தமிழ் மன்னர்கள் மதுவும் புலாலும் மாண்புடன் படைத்து அவர்களை மகிழ்வித்த வரலாறுகள் பண்டைத் தமிழ் நூல்களில் மலிந்து கிடக்

கின்றன. பழைய கள் சிறந்தது என்றும், வேக முடையது என்றும் புலவரும் பாடி யிருக்கின்றனர். "அரவு வெகுண்டன்ன தேறல்" "தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்" என்ற அடிகள் இவ்வுண்மையை நன்கு விளக்கும். காவியங்களில் உண்டாட்டுச் சிறப்புக்களை வைத்துப் பாடுதலும் புலவர் மரபாயிருந்து வருகின்றது. இவற்றை வைத்துக்கொண்டு பண்டைத்தமிழ் மக்கள் கட்குடிக்கு ஆதரவு தந்தனர் என்று கூறத் துணிவாரும் நமது நாட்டில் இல்லாமல் இல்லை. இத்தகையோர் உண்மை யுணராதவர் என்பதே நமது கருத்து. திருக்குறள் போன்ற நீதி நூற்களும் ஒழுக்க நூற்களும் கட்குடியை அறவே வெறுத்துக் கூறி யிருக்கின்றன. சமய நூற்கலெல்லாம் கட்குடியைத் தலைசிறந்த பாவமாக இழித்துரைக்கின்றன. நன்மையும் தீமையும் உலகந் தோன்றிய நாள் முதல் கலந்தே வருகின்றன. உலகத்தில் தீமையின்றி நன்மையே தாண்டவமாடிய காலம் ஒன்றுண்டு என்று யாரேனும் கூறத் துணிவர் என்று நாம் நம்பவில்லை. ஆதலால் பண்டை நூற்களில் கட்குடி பற்றிய செய்திகளும் வருணனைகளும் காணப்படுதலை ஒரு சார் மக்கள் விரும்பிப்போற்றி மகிழ்ந்ததை அக்காலப்புலவர் வருணித்ததாகவே கொள்ளவேண்டும். அப்புலவர் கட்குடிப்பது நல்லது—எல்லாரும் குடிக்கலாம் என்று கூறி யிருப்பதாக எந்த இடத்திலும் கண்டுகொள்ளக் கூடவில்லையே.

ஐரோப்பிய நாடுகளில் மிதமாக மதுபானம் செய்தல் இழிவாகவோ பாவமாகவோ கருதப்படுவதில்லை. அதற்கு மதம் இடந்தருவதாகவும் சொல்லப்படுகிறது. நடை முறையில் மிதம் அமிதமாக இருப்பது பிரத்தியக்ஷம் எனினும், அந்நாடுகளில் அமிதமும் சகஜமாகப் போய்விட்டது. அதற்குக் குளிர் மிகுதி காரணமாகக் காட்டப்படுகிறது. என்ன காரணம் காட்டினும் மது விஷத்தன்மை வாய்ந்தது என்ற உண்மையை மேனாட்டு வைத்திய நிபுணரே விரிவாக ஆராய்ந்து முடிவு கட்டியிருக்கின்றனர். ஆங்காங்கு மதுவிலக்குச் சங்கங்கள் ஏற்படுத்தி அறிஞர் பலர் பிரசாரம் செய்து வருகின்றனர். மதுவின் தீமையை விளக்கி ஏராளமான துண்டுப் பிரசுரங்களையும் நூல்களையும் வெளியிட்டு வருகின்றனர். அமெரிக்காவில் அடியோடு மதுவைச் சட்ட மூலமாக விலக்கிவிட்டனர். ஆதலால் வருந்தி உழைப்போர்க்குக் கள்ளும் சாராயமும் சிரம பரிகாரம் செய்து வலிமை அளிக்கின்றன என்போர் வாதம் போலிவாதம் என்பதில் கொஞ்சமேனும் சந்தேகம் இல்லை என்பதை நமது வாசகர்கட்கு உறுதியாய்த் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

நமது நாட்டில் பழைய கள்—சாராயக் குடிகளோடு புதிய அயல் நாட்டுக் குடிவகைகளும் பெருகி வருகின்றன. பீர், பிராந்தி, உஸ்கி, ஓயின், ஜின், ரம் முதலிய சாராய வகைகள் வெளிநாடுகளிலிருந்து ஆண்டுதோறும் ஏராளமாக இறக்குமதியாகின்றன. கள்—சாராயங்கள் ஏழை மக்களின் குடிகளைக் கெடுப்பதுபோலவே பிராந்தி முதலிய

மதுபான வகைகள் பணம் படைத்தவர்களின் குடிகளைக் கெடுத்து வருகின்றன. புதுக் குடிவகைகள் சிலர்க்கு நவீன நாகரிகத்தின் சின்னங்களாக விளங்குகின்றன. மொத்தம் இந்தியாவில் பிராந்தி 4,38,000-காலனும், ஜின் 1,31,000-காலனும், உஸ்கி 5,45,000 காலனும், ரம் 2,05,000 காலனும் இறக்குமதியாகின்றனவாம். இவற்றோடு வேறு மதுவகைகளும் சேர்ந்து மொத்தம் பதின்மூன்று லக்ஷத்து முப்பத்தொண்ணாயிரம் காலன்கள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாகி வருகின்றனவாம். 1929—30-வது வருஷத்தில் மதுபான வகை வாயிலாக இந்திய அரசாங்கத்திற்கு இருபது கோடி ரூபாய் வருமானம் வந்திருக்கிறதாம். அதற்கு முந்திய வருஷத்தைவிட இதில் நாற்பத்து நான்கு லக்ஷ ரூபாய் அதிகமாய்க் கிடைத்திருக்கிறதாம். இந்த வருவாய் 1930—31-ல் சற்றுக் குறைந்துவிட்டது. இதற்குக் காரணம் தேசீய இயக்கம் தீவிரமாய்ப் பரவி வருகின்றமையே யாகும். இப்பொழுது மதுபானக்கடை மறியல்கள் நாடெங்கும் உற்சாகத்துடன் நடைபெற்று வருகிறபடியால் இவ்வாண்டின் வருமானம் இன்னும் அதிகமாய்க் குறைந்துவிடலாம் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

குடிமக்களைத் துன்பங்களினின்றும் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தைச் சார்ந்தது. இதுவே அரசியல் முறையின் தத்துவமாகும். ஆனால் நமது நாட்டின் தலைவிதி வேறு விதமாய் அமைந்துவிட்டது. ஒரு காலத்தில் உலகத்திற்கே உண்டியும் உடையும் அறிவும் தந்தருளிய பாரத அன்னை இப்பொழுது எந்நிலையில் இருக்கிறாள் என்பதை நேயர்கள் சிந்திக்க வேண்டும். நமது அன்னை சுதந்தரம் இழந்து அந்நியர் ஆதிக்கத்தில் அல்லல் உழந்து நிற்கின்றபடியால் தன்மக்களைத் துன்பங்களினின்றும் காக்கும் திறமை அற்றுத் தவிக்கின்றாள் அன்னையின் அருந்தவப் புதல்வர் மகாத்மா காந்தியடிகள் தோன்றி அஹிம்ஸா தருமநெறி பற்றி விடுதலைபெற வழி காட்டிவிட்டார். பெண்கள்—குழந்தைகள் முதல் எல்லாரும் அவ்வழி நின்று தொண்டாற்ற முன்வந்து நிற்கின்றனர். காந்தி—இர்வின் உடன்படிக்கையில் கண்ட நிபந்தனைகளின்படி நாடெங்கும் மதுபானக்கடை மறியலும் அந்நிய ஆடை மறியலும் சிரத்தையுடன் நடைபெற்று வருகின்றன. பொது ஜன ஆதரவும் நாளுக்கு நாள் வளர்பிறைபோல் வளர்ந்து கொண்டே வருகிறது. கள்—சாராயக் கடைகளிலும், அந்நிய ஆடைக் கடைகளிலும் வியாபாரம் அருமையாகிவிட்டது. நீண்ட காலமாய்க் கள்—சாராயம் விற்று வருகின்றவர்கட்கும், அந்நிய ஜவுளி வர்த்தகம் செய்கின்றவர்கட்கும் இனிமேல் அவ் வியாபாரங்களில் தலையிடக்கூடாது என்ற உணர்ச்சி தோன்றிவிட்டது என்பது அநுபவம். நாடெங்கும் இத்தகைய உணர்ச்சி வளர்ச்சிபெற்று வருதல் அதிகார வர்க்கத்திற்குச் சகிக்க முடியவில்லை போல் தெரிகிறது. அதிகாரவர்க்கத்தினர் காந்தி-

இர்வின் உடன்படிக்கையைச் சரிவர நிறைவேற்றி வைப்பதாகத் தெரியவில்லை; பெரிதும் அலக்ஷிய மனப்பான்மையே காட்டி வருகின்றனர். காங்கிரஸ் தொண்டர்கள் அமைதியான முறையில் மறியல் தொண்டாற்றிவரும் உண்மை அதிகார வர்க்கம் நன்கு அறியும். அவர்கள் பற்பல தொல்லைகட்கும் துன்பங்கட்கும் உட்பட்டு வருகின்றனர். மறியல் தொண்டர்களின்மீது வழக்குகளும் தொடுக்கப்படுகின்றன. ஒரு சில குடியர்கள் கள்ளைக் கொப்பளித்துத் தொண்டர்களின் மீது காறி உமிழ்ந்ததாகவும், கள்ளை அபிஷேகம் செய்ததாகவும், மலத்தை வாரி இறைத்ததாகவும் பத்திரிகைகளில் வெளிவந்தன. சில இடங்களில் அடியும் உதையுங்கூட அகப்படுகின்றன. சென்னையில் ஒரு கடைக்காரர் துப்பாக்கியை நீட்டி அச்சுறுத்தினாராம். அஹிம்ஸா தரும நெறியினின்றும் அணுவளவும் பிறழாத தொண்டர்கள் அவற்றையெல்லாம் கவனியாமல் தங்கள் கடமையை ஆற்றி வருகின்றனர். இனியும் எவ்வளவு தொல்லைகளும் துன்பங்களும் நேரினும் காங்கிரஸ் தொண்டர்கள் தங்கள் தருமத்தினின்றும் வழுவார்கள் என்ற விஷயத்தில் எமக்கு மிகுந்த நம்பிக்கை உண்டு.

சென்னை சட்டசபை இருபது ஆண்டுகளில் நமது மாகாணத்தில் பூரணமாய் மதுவை ஒழித்துவிடுவதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. அத் தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்றி வைப்பதன் பேரால் சென்னை அரசாங்கம் ஆண்டுதோறும் லக்ஷக் கணக்கான பொருளைச் செலவு செய்து வருகிறது. ஜில்லாக்கள் தோறும் பிரசாரகர்கள் நியமிக்கப் பெற்றிருக்கின்றனர். காரியதரிசிகள் நியமிக்கப் பெற்றிருக்கின்றனர். தலைவர்கள் நியமிக்கப் பெற்றிருக்கின்றனர். இவர்கள் செய்யும் பிரசாரங்களில் மோட்டார் லாரிகட்கோ படக்காட்சிக் கருவிகட்கோ எத்தகைய குறைவும் இல்லை. ஆனால் கண்ட பலன் என்ன? வீண் பொருட் செலவைத் தவிர வேறு பயன் இருப்பதாக எமக்குத் தோன்றவில்லை, ஒவ்வொரு ஜில்லாவிலும் சர்க்கார் சம்பளம் பெறும் மதுவிலக்குப் பிரசாரகர்கள் சாதிப்பது என்ன என்று எல்லாரும் அறிந்தே இருக்கிறார்கள். எல்லாம் கண்ணைத் துடைக்கும் வியாபாரம் என்று சுருக்கமாகக் கூறி முடித்துவிடலாம்.

உண்மையில் அரசாங்கத்தார் மதுவை ஒழித்து விடும் நோக்கமுடையவர்களாயிருந்தால் காங்கிரஸ் தொண்டர்கள் செய்யும் கள்—சாராயக்கடை மறியலில் அநுதாப முடையவர்களாயிருத்தல் வேண்டும்; அநுதாபம் இல்லாவிட்டாலும் இடையூறேனும் செய்யாமலிருக்கலாம் அல்லவா? ஆனால் நமது அரசாங்கத்தார் என்ன செய்கின்றனர்? கள்—சாராயக் கடைக்காரர்களிடமும் ஏலங் கேட்க வருபவர்களிடமும் முழு அநுதாபங்காட்டுகின்றனர். காங்கிரஸ் தொண்டர்களிடம் "வேண்டாப் பெண்டாட்டி கை பட்டால் குற்றம்—கால் பட்டால் குற்றம்" என்ற தோரணையில் நடந்து வருகின்றனர். தீவிர

மாய் மறியல் நடக்கும் இடங்களில் கள்—சாராயங்கள் வெவ்வேறு வெளியிடங்களில் வைத்து விற்கப்படுகின்றன. இது கலால் சட்ட விதிகட்கு முழு முரண். அதிகாரிகள் கண்டும் காணாதவர்போல் இருந்து வருகின்றனர். பொது ஜனங்களும் தலைவர்களும் இவ்வுண்மைகளை எவ்வளவு தெளிவாய் எடுத்துக்காட்டினும் சர்க்கார் கண்ணெடுத்துப் பார்ப்பதாய்த் தெரியவில்லை. இதுதானா இருபதாண்டுகளில் பூரண மதுவிலக்கு ஏற்படுத்தும் முறை என்று கேட்கின்றோம்?

ஆதலால் மதுவிலக்கு விஷயத்தில் அரசாங்க உதவியை ஒரு நாளும் எதிர் பார்க்க முடியாது. அரசாங்கம் கலால் வருமானத்தை எளிதில் விட்டுவிடும் என்றும் நம்புவதற்கில்லை. இந்நிலையில் மறியல் ஒன்றே மதுவிலக்குக்கு ஏற்ற மருந்தாய் விளங்குகின்றது. இதை விடச் சிறந்த மருந்து இந்நோயை ஒழிப்பதற்கு வேறொன்று இருப்பதாய்க் கூற முடியாது. மறியலால் எத்தனையோ விடாக்குடியர் தங்கள் தீய பழக்கத்தினின்றும் விடுதலை பெற்றிருப்பதாகத் தகவல்கள் கிடைத்துக்கொண்டிருக்கின்றன. விற்பனை அருமையாகி விட்டதால் அநேக இடங்களில் கடைக்காரர்கள் குடிகாரர்களைத்தேடி, வலியச் சென்று, மோட்டார்களிலும் வண்டிகளிலும் ஏற்றிக்கொண்டு வந்து உபசரித்து, கள் சாராயங்களை இனமாக ஊற்றி வருகிறார்களாம். சென்னையிலும் பிறவிடங்களிலும் இவ்வாண்டில் ஏலங் கேட்பவர் இன்மையால் அதிகாரிகள் ஏலமெடுக்கும் நாளை வாய்தாப் போட்டுவிட நேர்ந்தது. இதை அஹிம்ஸா தருமத்தின்—சத்தியாக்கிரகத்தின் வெற்றியாகவே நாம் மதிக்கின்றோம். இனிமேல், மகாத்மா காந்தியடிகளின் ஆன்மசக்தி மதுப்பேயை விரைவில் நாட்டைவிட்டு ஓட்டமெடுக்குமாறு செய்துவிடும் என்பதில் அணுவளவும் ஐயம் இல்லை. இதற்குக் கோவை நகாசபை, கோவை தாலூகாபோர்டு, தென்னாற்காடு ஜில்லா போர்டு முதலிய ஸ்தல ஸ்தாபனங்களுங்கூட இம்மதுப்பேயைத் தொலைக்கப் பொருளுதவி செய்யும் தீர்மானங்களை நிறைவேற்றி வைத்தமையே போதிய நற்சான்றாகும் என்று எடுத்துக்காட்ட விரும்புகின்றோம்.

நாம் காந்தி-இர்வின் உடன்படிக்கையினின்றும் அணுவளவேனும் பிறழாமல் தொண்டாற்றி வருவோமாக. அதிகார வர்க்கமும் கடைக்காரர்களும் என்ன செய்யினும் அமைதியான முறையிலேயே அசையாமல் நிற்க வேண்டும். பிறர் கோபமூட்டினும், ஆத்திரமூட்டினும் தொண்டர்கள் அஞ்சாது அஹிம்ஸா தரும நெறியையே கடைப்பிடிக்க வேண்டும். "நல்ல காரியத்திற்கு நாலாயிரம் தொல்லை" என்பதை எல்லாரும் நினைவில் வைத்துக்கொண்டு உற்சாகத்துடன் தொண்டாற்ற வேண்டும். அப்பொழுது முழு வெற்றியும் நமதே. திருவருள் முன்னின்று காப்பதாக.

ஓம் தத் ஸத்.




# ஏழுமலையின் தத்துவம்.

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

ஏழுமலை யென்பது தமிழ்நாட்டிற்கு வடவெல்லையாகவுள்ள திரு வேங்கடமலையாம். இதற்குத் திருமலை, வேங்கடாசலம், வேங் கடாத்திரி, சேஷாசலம், சேஷாத்திரி, வடமலை, திருமலை எனப் பலவேறு பெயர்களுமுண்டு. இது திருவரங்கம், திருமலை, பெருமாள்கோவில் (காஞ்சி புரம்) என்னும் முக்கிய விஷ்ணுஸ்தலங்கள் மூன்றனுளொன்றாகும். இதனை யறியாதார் இத்தேயத்தின்கண் ஒருவருமிரார் என்னுமாறு இது மிகப் பிர சித்தி பெற்றதாகும். நாடோறும் எண்ணிலா யாத்திரீகர் இங்கு வந்த வண்ண மாகவே இருப்பர். திருப்பதிக்குப் போகிறவர்கள் வந்துவிட்டால் புகைவண்டி யில் மற்றவர்கள் பாடு திண்டாட்டமாய் விடும் என்றியம்பலாம்படி பல சம யங்களில் கிராமங்களே திரண்டு வந்துவிடும். திருச்சின்ன முழக்கமும், 'கோவிந்தா ! கோவிந்தா!!' வென்னும் கோஷமும் விசும்பளவும் எட்டும். ஏழு மைல் தூரமுள்ள ஏழுமலையில் எழுந்தருளி யிருக்கும் ஏழுமலையானுக்கு யாத் திரீகர் தாங்கள் பிரார்த்தனை செய்துகொண்டதற் கேற்ப முடிகொடுப்பதும் உண்டியில் பணம் போடுவதும் வழக்கம். நாடோறும் இவ்வாறு போடப்படு தல் வாயிலாகச் சேரும் பணமோ அமிதம்.

மொட்டையடித்துக் கொள்ளுவதும் உண்டிப்பணம் போடுவதுமே இந் தப் பெருமானுக்குச் செய்துகொள்ளும் முக்கிய பிரார்த்தனைகளாமென்பது பெரும்பாலோ ரபிப்பிராயமாம். பிரார்த்தனை செய்து கொண்டபின் தமக்கு நேர்ந்த நோய் முதலிய துன்பங்கள் விலகிப்போயின வென்றும் அவர்கள் கூறுகின்றனர். சொன்னபடி பிரார்த்தனை நடத்தத் தவறியவர்களுக்குப் பெருமாள் குற்றத்தினால் பெருந்துன்பங்கள் நேரிடுகின்றன வென்பதும், அதற்கு அபராதம் செலுத்துவதாகவோ—உண்டிப்பணமாயின் வட்டியுடன் செலுத்துவதாகவோ—சொல்லிக் கொண்டால் அவை நிவர்த்தியாகின்றன வென்பதும் சனங்களின் நம்பிக்கை.

திருமலைக்குச் செல்வோர்—மலையேறுவோர்—நடந்தே செல்லுதல் வேண்டும். விருத்தர்களாயும் வியாதியாளராயு மிருப்போர் தொட்டில் (டோலி)களில் செல்லுவார்கள். 'கோவிந்தன் பெயரைச் சொல்லிக்கொண்டே

---

உலகத்திற்கு நாசமுண்டென்று அறிகின்ற ஞானிகள் மரணத்தைப் பற்றி வேதனை யடைவதில்லை.

போனால் ஒரு சிரமமுமின்றி அவன் என்னை அழைத்துக் கொள்ளுவா' னென்னும் நம்பிக்கையோடு நடந்தேசெல்லும் வயோதிகருமுண்டு. இந்த மலைகள் ஏழனுள் முதல் மலையே மிகவும் செங்குத்தாயிருக்கும். அதுதான் ஏறுவோர்க்கு மிக்க சிரமத்தைத் தருவது. அதனுச்சியில் 'காலிகோபுர' மென்றழைக்கப்படும் ஓர் கோபுரமுண்டு. 'காலிகோபுரம் வரையில்தான் கஷ்டம்; அதற்குமேல் சுலபமாகச் சென்றுவிடலா'மென்று சொல்லப்படுவதுண்டு. ஏழாவது மலையின் முடிவே அப்பன் உறையுமிடம். அதற்கு முன்புள்ள மலையை முழங்கால் முறிச்சான்' என்கிறார்கள். அங்குச் செல்கையில் முழங்கால் முறிந்து விடுவதுபோலிருக்கும் போலும்!

முன்னொரு காலத்தில் அந்தணர்குலத்தி லுதித்தானொருவன் ஆசார வீனனாய்த் துஷ்டர்களின் கூட்டுறவால் கூடாவொழுக்கங்கொண் டுழன்றான். கொலையாதி பஞ்சமா பாதகங்களுள் எதையும் கூசாமல் செய்தான். புலை மாதைப் புணர்ந்தான். அவளுடன் சேர்ந்து மான் முதலிய மிருகங்களைக் கொன்று அவற்றின் ஊனைப்புசித்தான். கள்ளின்றி ஒரு நாளையும் கழியான். இத்தகைய சண்டாளனாகிய அவன் காட்டில் வேட்டையினிமித்த மலைந்து திரியுமோர்நாள் தற்செயலாக இம்மலையி லேறினான். அவ்வளவில் அவன் பாவங்களனைத்தும் ஆதவனைக்கண்ட பனிபோ லகன்றன. பரிசுத்தனேயாயினன்; சண்டாளத்துவம் நீங்கியது; சிறந்த அந்தண வுருக்கொண்டு அப்பனடிப் பேற்றிற் கருகனாயினன். அதுமுதல் இம்மலைக்கு 'வேங்கடம்' என்னும் பெயர் உண்டாயிற்று. வேங்கடம் என்பதற்குப் பாவங்களைப் போக்குவது என்பது பொருளாம்.

திருமாலுக்குச் 'சென்றால் குடையும், இருந்தாற் சிங்காசனமும், நின்றால் மரவடியும் அணையுமாகும்' அரவாகிய சேஷன் இம்மலை யுருக்கொண்டு பெருமானைத்தாங்கி நிற்றலால் இம்மலைக்கு சேஷாத்திரி, சேஷாசலம், சேஷகிரி என்னும் பெயர் வழங்குவதாயிற் றென்பர். இவைபோன்ற வரலாற்று விவரங்கள் பலவும் திருவேங்கடத் தலபுராணம் விரிவாய்க் கூறக் காணலாம்.

மேற்கூறியவற்றால் திருமலை யென்னுமோர் மலைபுள தென்பதும், ஏழு மலைகள் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டுத் தொடர்ச்சியாய் ஓரே மலையாகத் தோன்றலின் ஏழுமலை யென்றழைக்கப் படுகின்ற தென்பதும், ஏழாவது மலையில் ஸ்ரீநிவாசன் அடியார்க்கருள்செய்யு நிமித்தம் நின்ற திருக்கோலத்துடன் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கின்றன ரென்பதும், வருடமுழுவதும் தேசத்தின் எல்லாப் பாகங்களினின்றும் எண்ணற்ற யாத்திரீகர்கள் வடமலையப்பனைச் சேவிக்க வருகின்றன ரென்பதும், ஏழுமலையானுக்குப் பிரார்த்தனை செய்து கொள்வதால் சகல துன்பங்களுந் தொலையுமென்பதும் மொட்டையிட்டுக் கொள்ளுவதும் உண்டியிற் பெருந்தொகையான பணம் போடுவதுமே முக்கியமான பிரார்த்தனை யென்பதும், சனங்களின் நம்பிக்கை யென்பதும், மேலும் இம்மலை சகல பாவங்களையும் போக்குதலின் திருவேங்கட மெனவும் ஆதிசேஷனே அப்பனுவப்புடன் எழுந்தருளி யிருத்தற்பொருட்டு இம்மலை யுருக்கொண்டு நிற்றலின் சேஷாசலம் எனவும் அழைக்கப்படுகின்ற தென்பதும் பிறவும் பெற்றாம்.

---

பாலிய வயதுடையவர்களும், வயது வந்தவர்களும், வித்வான்களும், மூடர்களும், அரசர்களும், தோட்டியும் மரணத்திலிருந்து தப்பமுடியாது.

இவற்றுள் சில முக்கியமானவைகளைத் தனித்தனி யெடுத்து ஆராய்ந்து உண்மை காண்பது அத்தியாவசிய மாகலின், மலையைப்பற்றிய ஆராய்ச்சியைப் பின்னுக்கென வைத்துக்கொண்டு பிறவற்றை முன்னே ஆராய்வாம்.

துன்பந் தோன்றுங்கால் அதனை நீக்கித் தம்மைக் காக்குமாறு ஈசனைப் பிரார்த்தித்தல் எம்மதத்தினரிடத்தும் இயல்பாகவே காணப்படும் ஓர் செய்கையாம். ஆலயங்களில் விக்கிரகங்களின்றி வணங்குவோர் அம்முறைக்கேற்ப, 'ஆண்டவரே! என் துன்பங்களைப் போக்கி யருளல்வேண்டும். திருவுளமிரங்கி யருளவேண்டும்' எனப் பிரார்த்திப்பர். விக்கிரகம் வைத்துப் பூசிப்போர் தூபதீப நைவேத்தியங்களைக்கொண்டு தாம் பூசிக்கும் முறைக்கேற்ப 'பகவானே! என் கஷ்டத்தை நீக்கினால் உன் சன்னிதிக்கு வருகிறேன், தேங்காயுடைக்கிறேன், உண்டியிற் கைகொண்ட பணம் போடுகிறேன், மாவிளக் கேற்றுகிறேன், அருச்சனையு மபிஷேகமும் செய்விக்கிறேன், தளிகை விடுகிறேன்' எனப் பிரார்த்தித்துக் கொள்வர். எனவே, கஷ்டம் நேர்ந்தபோது அதனைத் தீர்க்கும் பொருட்டுத் தேவனைப் பிரார்த்தித்தல் எல்லா மதத்தினரிடத்தும் வழக்காற்றி லிருந்து வருகிறது என்பது மறுக்க முடியாததோ ருண்மையாகும்.

கஷ்டத்தை நீகுமாறு கடவுளைப் பிரார்த்திப்பது நியாயமான செய்கையே. அவனை நம்பினோர்க்கு அவரைவிட வேறு போக்கிடமேது? ஆண்டவன் 'அடியார் படுதுயராயினவெல்லாம் நிலந்தரஞ் செய்யும்' அருளாளனன்றோ! ஆனால் அப்பிரார்த்தனை அன்பை அடிப்படையாகக் கொண்டதாயிருத்தல் வேண்டுமேயன்றி அச்சத்தை அடிப்படையாகக் கொண்டதாயிருத்தல் கூடாது. அன்பு ஒன்றே அவரிடம் சேர்க்க வல்லதாகும். வேறொன்றினாலும் அவரை அடைய முடியாது. ஆகவே கஷ்டம் காணும்போது 'காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி, ''என்னப்பனே! கருணாசாகரா! உன்னையே ஆதாரமென நம்பு மடியேனை அல்லல்களைந்து ஆதரிப்பதுன் கடமையேயன்றோ? ஆபத்பாந்தவா! அநாதரக்ஷகா! என அகங்கரைந்து அவனது திருநாமங்களைச் சொல்லிப் பிரார்த்திக்க வேண்டியது கடமையாம். துன்பந் தொடர்ந்து வரும்போது மாத்திரமல்ல; இன்ப மெய்தும் போதும், ஓர் காரியத்தைத் தொடங்கும்போதும் முடிக்கும்போதும் காலைப்போதும் மாலைப்போதும் எப்போதுமே பிரார்த்தித்தலே முக்கிய கடமையா மென்றுணர்ந்து அவ்வாறு ஒழுகுதலே உத்தமச் செய்கையாம். இவ்வாறின்றி,

அன்பென்பதை அணுவளவு மறியாராய்—பக்தி யென்னும் பதத்தையு மறியாராய்—வெறுமனே மொட்டையிட்டுக் கொள்வதும் உண்டியிற் பணம் போடுவதுமாகிய இவைபோன்ற பிராத்தனைகளைச் செய்வது அறிவுடைமை யாகா தென்பதே அறிவுடையோர் அபிப்பிராயமாம். அதினும் சுவாமியை வட்டி வாங்குகிறவ னென்று வாய்கூசாது பேசுவது பெரு நகைப்புக் கிடமாகவன்றோ முடியும்? வட்டி வாங்குதல் சாஸ்திர விரோதமென்று கொண்டு பல பெரியோர் வாங்கா தொழிதலையும், தீராப் பொறியாகச் சிலர் தரும வட்டி யென்று சொற்ப வட்டி வாங்குவதையும், அதிக வட்டி வாங்குவோரை இழிஞரென றுலக மிகழ்ந்து கூறுவதையும் அறிந்திருக்கின்றோமே! இங்ஙனமாக, பணவாசை பிடித்தவ னெனக் கருதி பணம் போடுகிறே னென்றும்

---

இன்பவாழ்வு சுதந்திரத்தின் பயன். சுதந்தரம் பயமிலா நெஞ்சின் பயன்.

வட்டிபோட்டுச் செலுத்துகிறே னென்றும் பிரார்த்தனை செய்து கொள்வதும் அவ்வாறே போடுவதும் எவ்வளவு கிரம மற்ற காரியம்! ஆனால் இவ் வழக்கம் எவ்வாறுண்டாயிற்றோ வெனின்: தேவாலயங்களைத் தங்கள் ஜீவனோபாயத் தொழிற்சாலை யென நம்பி யிருப்போர் வருவாயி னிமித்தம் ஏற்படுத்திய கற்பனையே யென்பதைத் தவிர வேறு காரணம் கூறுதற் கிடமின்றாம்.

நாமும் நம துடல் பொரு ளாவியும் அவருடையனவாகவும், நம் பொருட்டே கிருபாமூர்த்தியாகிய அவர் வானையும் வளியையும் இரு சுடரையும் ஒளியையும் மற்று மெல்லாவற்றையும் படைத் தருளியதனால் சகலமும் அவருடைமைகளாகவு மிருக்கையில் நாம் அவருக்குத் தருவதாகிய பொருளு மொன்றுண்டோ? அவருடைய அருட்பெருக்கில் ஒரு திவலையைப் பெறும் பொருட்டன்றோ பெரியோர் 'காயிலைதின்றும் கானிலுறைந்தும் பூவலம் வந்து' முழல்கின்றனர்.

"பொன்னாற் பிரயோசனம் பொன்படைத் தாற்குண்டு
பொன் படைத்தான்
தன்னாற் பிரயோசனம் பொன்னுக்கங் கேதுண்டத்
தன்மையைப்போல்
உன்னாற் பிரயோசனம் வேணமெல்லா முண்டு
உன் றனக் கிங்கு
என்னாற் பிரயோசன மேதுண்டு காளத்தி
ஈச்சுரனே!" (பட்டினத்தடிகள்)

என்றபடி, அவருடை யருளில் லவலேசத்திற் கெதிர்நோக்கி யேக்கமுற் றிருக்கும் நாம் அவருககுக் கொடுப்பதென்ன? அவ்வாறொன் றிருக்கின்றதென்றால் அது அன்பை யன்றி—பக்தியை யன்றி—

படமுடியா தினித்துயரம் படமுடியாதரசே!
பட்டதெல்லாம் போதுமினிப் பயந்தீர்த்தென்
உடல் பொருளாதிய வெலாம் நீ யெடுத்துக்கொண்டுன்
உடல் பொருளாதிய வெலாம் உவந் தெனக்கே யளிப்பாய்

எனத் திருவருட் பிரகாச வள்ளலார் வழுத்தியவண்ணம்—நம துடல் பொருளாவிகளை யவருக்கே யொப்படைத்து விடுவதன்றி—வேறொன்றுமில்லை.

சுவாமிக்கு முடிகொடுக்கும் வழக்கம் இங்குமட்டு மன்று; திருத்தணிகை, திருவள்ளூர் முதலிய விடங்களிலும் காணப்படுகின்றது. இது யாரால் எப்பொழுது சிருஷ்டியாயிற் றென்பது விளங்கவில்லை. எதனை இழக்கநேரினும் தலைமயிரை யிழப்பது மாந்தர்க்குப் பெரும் வருத்தந் தருவதாகும். குற்றவாளிகளுக்கு மொட்டை யடித்தலைத் தண்டனையாகக் கொண்டிருந்தனர் முன்னோர். அது அவர்களை அவமானப்படுத்துவதற்குப் போதிய தண்டனை யெனபது அவர்க ளபிப்பிராய மாகும். இது உண்மையே. ஆகவே, அவ்வளவு மேன்மையாகக் கருதப்படும் முடியைக் கொடுப்பது ஒருவன் தான் மேலானதெனக் கருதி யிழத்தற் குடன்படாத வோர் பொருளைச் சுவாமிக்குக் கொடுத்துவிட்டா னெனக் கருதற் கிடமிருக்கின்ற தென்பதைத் தவிர இதற்கு வேறு காரணம் காட்ட வியலாது. இனி,

திருவேங்கட மென்னும் பெயரின் காரணத்தை நோக்குவோம். பரம சண்டாள னொருவன் ஈசுவர சிந்தனை சிறிதுமின்றியே மலைமே லேறியவனை

வில் சகல பாவங்களி னின்றும் நீங்கப் பெற்றனென்பது சுருதி யுக்தி அனுப வங்களுக்கு விருத்தமாம். என்னே! மலைமே லேறின மாத்திரையானே பாவங் கள் பறந்து போமானல் எல்லோரும் சிறிது தூரம் ஏறித் திரும்பி விடலாமே. ஏழுமலைக ளேறுவானேன்? அன்றியும் சுவாமி தரிசனஞ் செய்தல் முடி களை தல் முதலியனவும் பயனற்ற செயல்களாயன்றோ முடியும்! மேலும், இதுகா றும் அவ்வாறு பாபவிமோசனம் பெற்றுவிட்டதாக அனுபவித்தவர்கள் ஒருவ ரேனும் கூறக் கேட்டிலமே. சென்றுவந்த நாமும் அனுபவித் தறிந்திலமே. மலைக்குப் போய்வந்த பின்னரும் அனேகர் நோய்வாய்ப்பட்டுத் தவித்தலைத் தவிர்ந்தில ரென்பதும் மறுக்க முடியாத வுண்மையாம். ஆகவே, இதுவும் அசம்பாவிதமே யாம்.

ஆதிசேஷன் மலையுருக்கொண்டு நிற்றலால் இம் மலைக்குச் சேஷகிரி யென்னுமோர் பெயரு முண்டென வுரைத்தா மன்றே. ஆலோசிக்குமிடத்து இதுவும் பொருந்தாக் கூற்றாகும். சேடனே மலை வடிவாயின னென்றால் அந்த மலை இதுபோது மிருக்கின்றமையின் சேடனும் இன்னும் மலையாகவே யிருக்கின்றா னென்றே கொள்ளல்வேண்டும். இதனால் தன் சுயரூபத்தோடு வேறியாண்டு மிலனென்பது பெறப்படும். எனவே, நாராயணன் பள்ளி கொண்டிருக்கும் திருப்பாற் கடலில் அவன் பாயலாக இப்போதில்லை யென் பனபோன்ற ஐயங்கள் நிகழும். அன்றியும் அவன் அவனியை ஆயிரம் பண முடிகளாற் றாங்கவேண்டிய வேலையும் கெட்டிருக்கும். இதுபோன்ற பல காரணங்களால் இதுவும் பொருந்துமாற்றோடு (யுக்தியோடு) பொருந்துவ தன்றாம்.

சிலர் செப்பலாம் 'இது என்ன பெரிய விதண்டா வாதமா யிருக்கின் றதே? இது சரியல்ல; இது முறையல்ல; இது அசம்பவம்; இது தக்க காரண மாகாது; என்றிவ்வாறு ஒவ்வொன்றையும் ஒவ்வொரு குற்றங்காட்டிக் கழித் துக்கொண்டே போனல் முடிவுதானென்ன! இப்படிப்பார்த்தால் எல்லாந் தான் குற்றமுடைய தாகும்' என்று. இது விதண்டா வாதமன்று. விதண்டா வாதத்தால் சத்தியப் பொருள்களைக் குற்ற முடையவையா மெனச் சாதித்து விடுவதும் கூடாத காரியமாகும். முன்னைய ஆழ்வா ராசாரியர்களு ளெவ ரேனும் மொட்டையடித்துக் கொள்வதாக வாவது உண்டியில் பணம் போடு வதாகவாவது பிரார்த்தனை செய்துகொண்டதாகவும் அதன்படி நடத்தியதாக வும் அவர்கள் சரித்திரங்களால் தெரிய வருகின்றதா வெனக் கேட்கின்றோம். இல்லையே. பண்டைக் காலத்து யாண்டும் இவ் வழக்கம் இருந்ததில்லை யென்பது திண்ணம். பிற்காலத்தில்—அதாவது அக்காலத்திற்கும் இக்காலத் திற்கும் இடைப்பட்ட காலத்தில் எவ்வாறோ புகுத்தப்பட்ட செய்கைகளே இவை எனக் கோடலே ஏற்புடைத்தாகும்.

ஆயின், இம் மலையின் வரலாற்றுண்மை யாது? ஆழ்வார்கள் முதலி யோர் "திருவேங்கடச் சுனையில் மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே;" "செடியாய்ப் பிறக்கும் திருவுடையே னாவேனே." "கோனேரி வாழும் குரு காய்ப் பிறப்பேனே." "கானாறாய்ப் பாயுங் கருத்துடையே னாவேனே" என் பனபோன்ற வாக்கியங்களால் இம் மலையைப் புகழ்ந்து பேசி யிருக்கின்றனரே என்னு மித்தியாதி சங்கைகள் நிகழுமன்றே. இவற்றிற்குச் சமாதானம் யாது? எனின்: அவற்றைப்பற்றிய இரகசியங்களை அடுத்த விதழிற் காட்டுவோம்.

# "நாடென்ப நாடாவளத்தன"

(தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பி. ஏ.)

" நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு." என்பது வள்ளுவர் இன் குறள்.

உலகுய்வான் திருமறை வகுத்தருளிய ஆசிரியர் வள்ளுவனார், நாட்டின் இலக்கணம் கூறப்போந்த விடத்து, தன்னகத்தே வாழ்பவர் தேடித் தேடி முயன்றாலன்றி அவர்கட்கு வேண்டும் பொருள்கள் நல்காத நாட்டை ஒரு நாடு என்று சொல்வது தகாது என்றும், நாடென்றால் ஒருவாது முயற்சியுமின்றி அதனகத்தே வாழும் மக்களுக்கு வேண்டும் பொருள்களைத் தானே நல்கும் நாடே நாடாகும் என்றும் கூறுகின்றார். ஒரு நாட்டின் இலக்கணம் இதுதான் என்று கொண்டால், கவியரசர் கம்பர் பெருமானது உலகம் போற்றும் உயரிய நூலாம் இராம காதையில் காணுகின்ற கோசலை நாடும் ஒரு நாடாகவே வேண்டும். அந்நாடு நம் வள்ளுவர் அருளிய தெள்ளிய குறளில் காணுகின்ற இலக்கணத்திற்கு எத்துணைப் பொருத்தமாய் அமைந்துள்ளது என்று பார்ப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

கவிதை யியற்றிய கவிஞர் அனைவரும் அவரவர் தம் காவியத்தில், அவர்கள் எடுத்துக் கொண்ட நாட்டின் வளங்கூறப் போந்தவிடத்து, அந்நாட்டிலுள்ள உழவர் பெருமைகளையே போற்றிப் புகழ்வர். "உழுதுண்டு வாழ்வதற கொப்பில்லை" என்னும் உயரிய கொள்கையுடைய உழவர் பெருமக்கள் தம் தம் வயல்களுக்குச் சென்று, ஏரிலே எருதுகளைப் பூட்டி, நிலத்தை உழுது பண்படுத்தி, விதைவிதைத்து, களைகழித்து, பயிர் வளர்த்து, வளர்ந்த பயிரை அறுத்து, அடித்துப் புடைத்து, பின்னர் அத்தானியங்களை வண்டியிலேற்றி வீட்டில் சேர்ப்பர். இதுவே அவரது வாழ்க்கையாய் அமைந்து கிடக்கக் காண்கின்றோம். இத்தியாதிய வேறுபட்ட தொழில் முறைகளைப் புனைந்து கூறுவதே கவிகளது மரபாகும். ஆனால் உழவர்களை இவ்வளவு தொழில்கட்கும் ஆளாக்கி, அதனால் அவர்கள் வளம் பெற வாழ்ந்ததாய் அமைத்திருக்கும் நாடு, நம் வள்ளுவர் அருளிய நாட்டின் இலக்கணத்திற்கு மாறுபட்டதே யன்றோ. அதனாறன் கவியரசர் கம்பர் பெருமான் மற்றைய கவிஞர்கள் கூறும் முறையினின்றும் மாறுபட்டு, தமிழின் தனிப் பெரும் புலவரான வள்ளுவர் அருளிய நாட்டின் இலக்கணத்திற்கு ஒப்பவே தமது கோசலைநாட்டை அமைத்தருளுகின்றார். கம்பரது கவியால் புனைந்து கூறப்பட்டுள்ள கோசல நாட்டில் மக்கள் சிறிதும் மெய் முயன்று தமக்கென ஒரு பொருள் ஈட்டிக்கொண்டாரல்லர். உழவர் பெரு மக்கள் நிலங்களை உழுது பண்படுத்தியதற்கு இரண்டொரு குறிப்புகளே காணப்படுகின்றன. ஆனால் இவ்வுழு தொழில் செய்யும் மள்ளர்கள் பயிர் செய்ததைப்பற்றி ஒரு குறிப்பும் காணப்படவில்லை. அவர்கள் தம் நிலத்தில் விதை விதைத்ததாவது, நீர் பாய்ச்சியதாவது நாற்று நட்டதாவது கவியரசர் கம்பர் கண்ணுக்குத் தோன்ற

வில்லை. களைதான் பறித்தனர் என்றாலோ கோசல தேசத்து மள்ளர் நினைத்தனர் பறித்திலர். ஏனெனில்

"பண்கள்வாய் மிழற்று மின்சொல் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகால் முகம்வா யொக்கும் களையலாற் களையிலாமை கண்டு
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலா துலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்"

என்று கூறும் திறன் கற்றோர் உளத்திற்கு கழிபேருவகையைத் தருகின்றது. கோசல நாட்டு மள்ளர்கள் களைபறியாது நின்றதற்குக் காரணம் கூறி அம் மள்ளரது உள்ளத்தன்மை விளக்கிய கம்பரது கவிப்பெருமையே பெருமை.

நிலத்தையும் உழாது, விதையும் விதையாது, நீரும் பாய்ச்சாது, நாற்றும் நடாது, களையும் பறியாது, தானே விளைந்த பயிரை அறுக்கவேனும் கவியரசர் கம்பர் தம் மள்ளர்களை ஏவவில்லை. அரிந்ததும் அறியார் அரிந்த கதிரை அடுக்கிவைத்ததும் அறியார். ஆனால்,

"எறிதரு மரியின் சும்மை எடுத்து வானிட்ட போர்கள்
குறிகளும் போற்றிக் கொள்வார் கொன்றநெற் குவைகள் [செய்வார்
வறியவர்க் குதவி மிக்க விருந்துண மனையி னுய்ப்பார்
நெறிகளும் புதையப் பண்டி நிரைத்துமண் ணெளிய வூர்வார்"

என்று ஒரு பிரயத்தனமும் இல்லாது, தானே விளைந்த பயிரைத் தம் மனையகம் சேர்ப்பது மட்டுமே தமது உறு தொழிலாகக் கொண்டனர் கோசல நாட்டுக் குலமள்ளர் என்று கம்பர் பெருமான் அருளிய சித்திரம் எத்துணை அழகுடையதாய்த் திகழ்கின்றது என்பதை அன்பர்களே உற்று நோக்குங்கள். ஆகவே பல் வளமும் பல் பொருளும் இவ்விதம் எளிதில் கோசல நாட்டார்க்குத் தந்து நாடென்பது நாடாவளத்தன என்று வள்ளுவர் அருளிய நாட்டின் இலக்கணத்திற்கு இலக்கியமாக நின்றது நம் கோசல நாடு என்று யான் கூறுவேனே யானால் அது ஒரு சிறிதும் மிகையாகாது.

ஆனால் ஒரு ஐயம்: வண்டுகள் எல்லா மலர்களிடத்தும் சென்று தேனைக் கொண்டுவந்து ஓரிடத்தில் சேர்ப்பது போல இம்மள்ளர் வயல்களுக்கும், பொழில்களுக்கும் சென்று அவ்விடத்தில் உள்ள பொருள்களைக் கிரகித்துக் கொண்டுவந்து தமது இருப்பிடத்தில் சேர்ப்பர் என்னும் பொருள்பட.

"கதிர் படு வயலி னுள்ள கடிகமழ் பொழி லுள்ள
முதிர் பல மரத்தி னுள்ள முதிரைகள் புறவி னுள்ள
பதிபடு கொடியி னுள்ள படிவளர் குழியி னுள்ள
மதுவள மலரிற் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்"

என அமைத்திருக்கும் செய்யுளின் உண்மை என்னே என்று சிலர் வினவலாம். தேடித் தேடித் தேனைக் கொள்ளும் வண்டுகள் முயற்சியே செய்யாது வளம்பெற வாழும் மள்ளர்கட்கு உவமை யாவதெங்ஙனம் என்னும் கேள்வி எழலாம். ஆனால், தேனிருக்கும் மலரையும் செடியையும் அவ்வண்டுகளே வைத்து வளர்த்ததில்லை. மற்றும் அத் தேனைச் சேகரிக்கிறதே யொழிய அத்தேனையும் அவை தாமே ஆக்கியதில்லை. பின்னும் தேடி எடுத்த தேனைத் தனக்கெனக் கொள்ளாது பிறர்க்கெனவே சேர்த்துவைக்கும் இயல்புடையது வண்டு. ஆகவே, வித்திடாது பயிர் விளைத்தும், விளைந்த பயிரை அரியாது தம் மனையகத்தே சேர்த்தும், சேர்த்ததை "தம்தம் இல்லிருந்து தாமும்,

விருந்தொடும், தமரினேடும்" உண்டு வாழும் மள்ளர்கள் வண்டிற்கு உவமையே யாவர்.

இவ்விதம் நாடா வளத்ததாய் வேண்டிய பொருளை ஒருவாது முயற்சியுமின்றித் தானே நல்கும் கோசலை நாட்டின் வளத்தைப் போற்றிப் புகழும் கம்பர் கவிநலம் நாம் கண்டு மகிழ்வதற்குரிய ஓர் இடமாகும்.

"வரம்பெலாம் முத்தம்தத்தும் மடையெலாம் பணில மாநீர்க்
குரம்பெலாம் செம்பொன் மேதிக் குழியெலாம் கழுநீர்க்கொள்ளை
பரம்பெலாம் பவளஞ்சாலிப் பரப்பெலாம் அன்னம் பாங்கர்க்
கரம்பெலாஞ் செந்தேன் சந்தக் காவெலாம் களி வண்டீட்டம்"

என்று கம்பர் கூறுவது கோசல தேசத்தின் பெருமையைப் பெரிதும் விளக்குவதாகும். இன்னும் சேவலோடு கூடிய பெட்டைகள், தம் தம் கால்களால் குப்பை கூளங்களைக் கிண்டிய காலத்தும் அங்கும் அழகிய மணிகளே பிரகாசிக்கின்றன. இம் மணிகளைக் கண்ட குருவிக் கூட்டங்கள் அவைகளை மின்மினி யெனக் கருதித் தம் கூடுகளுக்கு எடுத்துச் சென்று அவ்விடத்தே வைத்துக் கொள்ளும் என்று கோசலத்துச் செல்வத்தின் மிகுதியை குப்பைமேட்டிலும், குருவிக் கூட்டிலும் காட்டி கம்பர் தீட்டியுள்ள சித்திரத்தை உற்று நோக்குங்கள். பொன்னாலும், மணியாலும், முத்தாலும், சங்காலும் வளம் பெறவிருந்த நாடு கோசலை நாடு என்பதே கவியரசர் கருத்தாகும். முற்றத்தில் உலர்த்திய பாக்கைக் கொழிக்கும் மாதர்கள் ஆவைகளிலுள்ள முத்தையே கொழித்தெடுத் தெறிவர் என்று கோசலத்துச் செல்வத்தின் மிகுதியை அழகாகப் போற்றி யுரைக்கின்றார் கவியரசர் கம்பர் பெருமான்.

இவ்வாறு செல்வங் கொழித்து, யாதொரு முயற்சியுமின்றி தன்னகத்தே வாழும் மக்களுக்கு வேண்டும் பொருளை நல்கி நாடா வளத்ததாய்க் கோசல நாடு விளங்கியதற்குக் காரணம், அத்தேசத்து மாந்தரின் விருந்தோம்பும் வாழ்க்கையும், மாதர்தம் கற்புடைமையுமே யாகும். நாடென்ப நாடா வளத்தன என்று நாட்டின் இலக்கணத்தை கவியரசர் கம்பருக்கு எடுத்துக் கொடுத்த வள்ளுவரே

"வித்து மிடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்" என்றும்

"தெய்வந் தொழா அள் கொழுநற் றொழு தெழுவாள்
பெய்யனப் பெய்யும் மழை"

என்றும் இரண்டு அழகிய குறள்கள் அமைத்துக் கொடுத்திருக்கின்றார்.

"விருந்தினர் முகங்கண்டன்ன விழவணி விரும்பும்"

கோசல தேசத்து மக்கள்

"முந்து முக்கனி யினொ முதிரையின் முழுத்த நெய்யிற்
செந்தயிர் கண்டங் கண்டம் இடையிடை செறிந்த சேற்றில்
தம்தமில் விருந்து தாமும் விருந்தோடும் தமரினேடும்
அந்தணர் அமுத உண்டி அயில்வறும்"

என்று விருந்தோம்பும் வாழ்க்கையைப் போற்றிப் புகழும் கம்பர் கவிநலம் அழகுடையதே யன்றோ. இவ்வாறு விருந்தோம்பும் வாழ்க்கையுடையராய மக்கள் வாழ்ந்த நாட்டில் மாதம் மும்மாரி தவறாது பெய்தது. ஆகவே வள்ளுவர் கூறிய நாட்டின் இலக்கணத்திற்குப் பொருத்தமாகக் கம்பரது கோசல நாடு இலக்கியமாக அமைந்தது போற்றத் தக்கதொரு பொருளாகும்.




# சான்றோர் அணி

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

அழகிய பொருளைக் காண்பதே ஆனந்தமென்று ஓர் ஆங்கிலக் கவிஞர் அருளிப்போந்தார். இயற்கையில் இலங்கும் அழகினைக்கண்டு களிபேருவகையுற்ற அறிஞர், தாம் பெற்ற இன்பத்தை ஏனைய மக்களும் பெற்று இன்புறுமாறு எழுதி யமைத்தல் இயல்பாகும். நாநலம் வாய்ந்த நல்லியற் கவிஞர் இவ் வழகினை இனிய செஞ்சொற்களால் எழுதி யமைத்தார். இவ்வாறு வடித்த செஞ் சொற்களால் அழகிய பொருள்களை உயிர் ஓவியங்களாகக் கற்போர் கண்ணெதிரே எழுதிக்காட்டுந் திறம்வாய்ந்த கவிஞர் பலர் தமிழகத்தில் திகழ்ந்தார்கள். உள்ளதை உள்ளவாறு எழுதி யமைத்த அக் கவிஞரது கவிநலம் என்றென்றும் உலப்பிலா இன்பம் பயக்கும் என்பது ஒரு தலையாம்.

தமிழ் மொழியில் விளங்கும் ஐம்பெருங் காவியங்களுள் ஒன்றாய சிந்தாமணி என்னும் செம்மை சான்ற நூல்செய்த தேவர் நல்லியற் கவிஞரே யென்பது நாடறிந்த உண்மையாகும். முல்லை நிலமகளாய ஓர் நங்கையை இக் கவிஞர் எழுதிக் காட்டும் முறை கற்போர் கருத்தைக் கவர்கின்றது. ஆநிரை கவர்ந்து முல்லை நிலமாந்தர்க்கு ஆறாத்துயர் விளைத்த குன்றக் குறவரை சீவகன் என்னும் சிறந்த வீரன் வில்லம்பால் அழித்து வென்றான். தாயைப் பிரிந்த கன்றுகளும் பசுவைக் காணாத பாவையரும் கவலை யொழிந்து களிப் பெய்துமாறு அவ்வீரன் ஆநிரையை மீண்டும் ஆயருக்கு அளித்தான். இவ் வாறு சீவகன் செய்யாமற் செய்த உதவியின் செம்மையை அறிந்த நந்தகோன் என்னும் முல்லைநில வேந்தன், தன் அருமைத் திருமகளை அவ் வீரனுக்கு மணம்புரிந்து மகிழ்விக்கக் கருதினான். வீரருக்குரிய வட்டுடையிற் பொலிந்து நின்ற வள்ளலாய சீவகனிடம் தன் மங்கையின் வடிவழகினைப் பேசலுற்றான்.

"வெண்ணெய்போன்று ஊறினியள் மேம்பால்போல் தீஞ்சொல்லள்
உண்ண உருக்கிய ஆன்நெய்போல் மேனியள்"

என்று அம் மங்கையின் மேனியின் மென்மையையும் சொல்லின் செம்மை

---

ஒருவன் நூல் செய்வதில் கடைசியாய் அறிந்துகொள்வது முதலில் எதை எழுதவேண்டும் என்பதே.

யையும் நந்தகோன் அறிவிக்கும் முறை அறிந்து மகிழத்தக்கதாகும். ஆயர் சேரியில் பாலும் தயிரும் பழமும் அருந்தி வண்ணமுற வளர்ந்த பெண்ணின் மேனி, வெண்ணெய்போல் மென்மையுற் றிலங்குமென்று ஆயர்கோன் அறிவித்தான். இன்னும் காவறியாத அக் கன்னிகையின் சொற்கள் கறந்த பால் போல் காதுக்கினியவா மென்று அந்நங்கையின் சொல்லின் சுவையைப் புகழ்ந் துரைத்தான். அன்றியும் ஒளி கிளரும் வண்ணமும் மணம் கமழும் மேனியும் வாய்ந்த மங்கையின் உருவினை உருக்கிய நெய்யினுக் குவமை கூறினன். ஆகவே கதிரவன் எழுங் காலமுதல் விழுங் காலவரை பசுவின் பாலொடும் நெய்யொடும் பழகி அவற்றின் சுவையையும் மணத்தையும் செவ்வையாய் அறிந்திருந்த முல்லைநில மன்னன், தன் மங்கையின் சொல், பால் போன்ற தென்றும் மேனி நெய்போன்ற தென்றும் கூறுந்திறம் இயற்கையோடிசைந்து நின்று எல்லையற்ற இன்பந் தருவதாகும். உள்ளதை உள்ளவாறெழுதும் உயரிய நலம் அமையப் பெறாத கவிஞர் ஒருவர் இக்காரிகையின் வனப்பினை எழுதப்போந்தால் அவள் முகம் மலர் போன்றதென்றும், கண் குவளை போன்றதென்றும், பல் முத்துப் போன்றதென்றும், வாய் பவளம் போன்றதென்றும், இடை கொடி போன்றதென்றும், தொடை தண்டு போன்றதென்றும் இவ்வாறாக தலை முதல் தாள்வரை முறையாகப் புனைந்துரைப்பாரென்பதில் ஐயமொன்றுளதோ? வண்டறையும் வாவியினின்றும் மலர்களை வரவழைத்து மங்கையின் முகத்திற்கும் கண்ணிற்கும் உவமை கூற முல்லை நில மன்னன் உன்னினனல்லன். நீலத்திரைக் கடலினின்றும் நித்திலமும் பவளமும் வரவழைத்து மங்கையின் பல்லுக்கும் வாய்க்கும் உவமை கூறக் கருதினனல்லன். வளமார்ந்த புலங்களில் வளரும் வஞ்சிக் கொடியையும் வாழைத் தண்டையும் வரவழைத்து இடைக்கும் தொடைக்கும் உவமை கூற இசைந்தானல்லன். இவ்வாறு புனைந்துரையில் முனைந்து செல்லாது ஆயர் குலத்திற் பிறந்து வளர்ந்த அருங்கன்னியை ஓர் முல்லை நிலமகளாகக் கற்போர் கண்ணெதிரே எழுதி யமைத்த சிந்தாமணிக் கவிஞரது சொற்சுவையும் பொருட்சுவையும் அறிந்து போற்றத் தக்கனவாம்.

இனிச் சங்கச் சான்றோர்களில் ஒருவராகக் கருதப்படுகின்ற தாமோதரனார் என்னும் தமிழ்க் கவிஞர் தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரியற்றிய திருக்குறளின் பெருமையைப் பேசப் போந்த பொழுது,

"ஏந்தி நீர்க்கண்டம் தெரிசுக்கு தேனளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்—காந்து
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு"

என்று அருளிய வெண்பாவிலும் இத்தகைய இயற்கை நலம் அமைந்திலங்கக் காணலாம். ஓதற்கெளிதாய் உணர்தற்கரிதாய் அமைந்த திருக்குறளின் செம்மையை, சங்கப் புலவராய சான்றோர் பலவாறு புகழ்ந்துரைத்தார்கள். இவ்வாறு பொது மறையைப் புகழ்ந்துரைக்கும் பேறுபெற்ற புலவர்களில்

---

காலனுடைய பாசத்திலிருந்து விமோசனம் கிடையாது. தகப்பன் மகனையாவது, உறவினர் பந்துக்களையாவது மரணத்திலிருந்து காப்பது முடியாதகாரியம்.

மருத்துவன் தாமோதரனு ரென்னும் கவிஞரும் ஒருவராய் விளங்கினர். இவ் வறிஞர் மருத்துவ நூலில் நன்கு பயின்று, நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச் செய்யும் நுண்ணறிவும் பெற்றிருந்தமை யால் மருத்துவன் தாமோதரனு ரென்று அக்காலத்தில் வழங்கப் பெற்ருர். இப்புலவர் தாம் பல்காற் பயின்ற மருத்துவ நூலினின்று ஓர் உவமை எடுத்து ஆளும் அழகு அறிந்து மகிழத் தக்கதாகும். சீந்தியின் பாலும் சுக்கின் பாலும் தேன்பாலும் ஒன்ருய்க் கலந்து மோந்தால் தலைக் குத்துத் தீரும் என்பது பண்டை மருத்துவ நூலோர் கருத்தாகத் தெரிகின்றது. இம்மூன்று பாலையும் கலந்து மோந்தபொழுது, மாந்தர் தலைக்குத்துத் தீர்ந்து மகிழ்வுறுதல் போன்று அறப்பால் பொருட்பால் இன்பப்பால் என்னும் முப்பாலுங் கலந்த திருக்குற ளின் மணம் வீசியபோது சீத்தலைச் சாத்தனுரென்னும் சிறந்த புலவரது தலைக்குத்துத் தீர்ந்தது என்று மருத்துவனுர் கூறி மகிழ்ந்தார். அமிழ்தினும் இனிய தமிழ் மொழியில் மணிமேகலை என்னும் சிறந்த காவியம் இயற்றிய சீத்தலைச் சாத்தனுர் தமிழ் மொழியில் தலையாய அன்புவாய்ந்த புலவராய் விளங்கினுரென்றும், பிழை மலிந்த தமிழ் நூல்களைக் காணுந்தோறும் தவ றிழைத்த புலவர்களை நோவாது தம் தலை விதியை நோவார் போன்று கையி லமைந்த கூரிய எழுத்தாணியால் தலையில் குத்திக்கொள்வ ரென்றும், இவ் வாறு பலகால் குத்தி வந்த பான்மையால் குருதி மாருது பெருகி சீப்பிடித்த சிரமுடையவராய் சாத்தனுர் சிந்தை தளர்ந்திருந்தாரென்றும், நிறைமொழிச் செல்வராய வள்ளுவனுரியற்றிய மறைமொழியைக் கேட்டபோது இக்கவிஞர் தலைக் குத்துத் தீர்ந்து களிப்பெய்தினுரென்றும் கர்ண பரம்பரைக் கதை கூறுகின்றது. இக்கதையைப் பொதிந்து வள்ளுவர் அருளிய திருக்குறளை வாயாரப் புகழ்ந்துரைத்த மருத்துவனுர் மொழிகள் அவர் மனத்தில் எழுந்த கருத்தை இயற்கை முறையில் எடுத்துரைக்க காணலாம்.

இனி இத்தமிழகத்தில் வாழ்ந்த அறுபான்மும்மை அடியாரது பெருமை யை, தேன்பிலிற்றும் தீந் தமிழ் மொழிகளால் எழுதியமைத்த சேக்கிழார் பெருமானும் இத்தகைய இயற்கை உவமைகளை ஆங்காங்கு அருளிப் போந் தார். காளத்தி வேடனுய திண்ணனென்பான் காடன் நாணன் என்னும் நண்பரோடு கன்னி வேட்டைக்குச் சென்றபோது அக்குன்றில் அமர்ந்திருந்த குடுமித் தேவரைக் கண்டு அகங்குழைந் துருகிப் பற்றற்ற பெருமானைப் பற்றி நின்ற பான்மையை எழுதப்போந்த கவிஞர் "வங்கினைப் பற்றிப் போகா வல் லுடும் பென்ன நின்ருன்" என்று அறிவிக்குந் திறம் அழகுவாய்ந்ததாகும். காளத்தி மலையில் கல்லதிர ஓடும் வல் விலங்குகளையும், விடர்களில் அமைந்த உடும்புகளையும் நன்ரு யறிந்திருந்த வேடனுய நாணன் திண்ணனது திறத் தினை இவ்வாறு அறிவிக்கின்ருன். குடுமித் தேவரைப்பற்றி விடாது கிடந்த திண்ணனை வங்கினைப் பற்றிக் கிடக்கும் வல்லுடும்புக்கு உவமை கூறினுன். இத்தகைய உவமை வேடர் நாவில் இயல்பாக எழுவதாகும் என்பது சொல் லாமலே அமையும். இவ்வாறு இயற்கை அணிகளால் தமிழ் அன்னையின் அழ கினுக் கழகு செய்யும் செஞ்சொற் கவிஞரது செம்மைசான்ற மொழிகள் என் ஞான்றும் நயந்தேரும் மாணவர்க்கு நல்விருந்தாகும்.

---

சம்சார சாகரத்திலுள்ள கொடிய காற்றுக்களை எதிர்ப்பதற்கு, சந்நியாச மாகிய தோணிக்கோ, கர்மாதி போதங்களுக்கோ சக்தி இல்லை. ஞானமாகிய தோணியே உபயோகமாகும்.

# மேனாட்டு விழுச் செல்வம்

(பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

1 அறிவின் உதவியின்றி உணர்ச்சி மூலம் நம்பப்படுபவைகளுக்குத் தவறான காரணங் கண்டுபிடிப்பதே தத்துவ சாஸ்திரம். ஆனால் அக்காரணம் காண்பதும் ஒரு உணர்ச்சியே. ப்ராட்லி.

2 நம்மைத் திருத்திக் கொள்வதினும் விரைவாக உலகைத் திருத்திவிட முடியாது. பிஷப். க்ரெய்ட்டன்.

3 நம் செயலால் தேடிக்கொள்ளும் ஸ்நேகிதர்களைவிட அதிகப் பகைவர்களை நம்மொழியால் தேடிக் கொள்கின்றோம். காலின்ஸ்.

4 சான்றோர் சந்திரனைப்போல் தம் நற்குணத்தையே உலகுக்குக் காட்டுகின்றனர். காலின்ஸ்.

5 துக்கமாயிருக்க ஒருநாளும் நியாயம் கிடையாது. ஸ்பைனோஜா.

6 எண்ணம் இயற்கைப்படி எழுகின்றது, பேச்சு கற்பித்தபடி பிறக்கின்றது, செயல் வழக்கப்படி நிகழ்கின்றது. பேக்கன்.

7 "இயற்கை" எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளும்படி கட்டளையிடுகின்றது. ஆனால் நீ அவையின்றி வாழக் கற்றுக்கொள்ள மறந்துவிடாதே. மார்லி.

8 'எந்தக் கட்சி அபிப்பிராயத்தையும் தழுவுவதில்லை' என்று யாரேனும் கூறினால் உடனே அவரைத் தைர்யமாய் "இவர் சீர்திருத்தம் விரும்பாத கட்சியைச் சேர்ந்தவர்" என்று கூறிவிடலாம். மார்லி.

9 உலகம் உதவக்கூடியதற்கு அதிகமாக உலக வாழ்வினின்றும் எதிர்பாராதே. மில்.

10 உலகத்தின் அந்தரங்க ரகசியம் அறிவொன்றினால் மட்டுமே அறிந்துவிட முடியாது. நண்பன் மனத்துள் பார்ப்பதுபோல் பார்த்தால் மட்டுமே அறிய முடியும். கதே.

11 இடையூறு பெரியோரிடம் ஊக்கத்தை எழுப்பும், அவர்கள் அதனோடு சண்டையிட்டு ஜயம்பெற முயல்வர். இடையூறும் தம் இன்பத்தில்

---

காமம், லோபம், ஜீவவேட்கை. இம்மூன்று பாசங்களையும் அறுத்தவர்களுக்கு சுப சிந்தனைகளும், சுப கர்மமும், ஆனந்தமும் பிரகாசிக்கும். அவர்களுடைய ஜீவன் சுபாவஸ்தைகளில் அவதாரம்செய்து கிரமமாய் நிர்வாண பதவிக்குச் செல்லுவதாகும். நதிகள் முடிவில் சமுத்திரத்திற்குச் சென்று சேருவதுபோல்.

ஒரு அம்சமே என்று கருதாதவருடைய மனம் மிகத் தாழ்ந்ததாகவே இருக்கவேண்டும். ஷாலிபாக்ஸ்.

12 பெரிய விஷயத்திற்காக உயிர்துறப்பவர் ஒருநாளும் தோற்றவராகார். பைரன்.

13 மனித வாழ்வில் அழகுடையவை ஆசைகளே. ஆனால் அவைகளுக்கு அறிவில்லை. அற்பமாகவேனும் அறிவுடையதே தலைசிறந்தது. அது தான் அன்பு எனப்படும். அவற்றுள் அறிவில் சிறந்தது ஒன்றுண்டு, அதற்குப் பெயர் பொருளாசை, அது அஞ்சத்தக்கபடி அழகற்றதாகும். அனடோல் பிரான்ஸ்.

14 ஒருநாளும் திருப்தி செய்யமுடியாத மூன்று ஆசைகள் உள:—(1) இன்னும் வேண்டும் என்னும் செல்வர் ஆசை (2) வேறு ஏதேனும் வேண்டும் என்னும் நோயாளி ஆசை (3) வேறு எங்கேனும் போகவேண்டும் என்னும் யாத்திரிகன் ஆசை. எமர்ஸன்.

15 பிறர் துன்பத்தினும் பிறர் இன்பத்தினும் அனுதாபம் காட்டக் கூடிய அளவே நாம் அறநெறியில் முன்னேறுவதாகக் கூறமுடியும். ஜார்ஜ் எலியட்.

16 மனிதர்க்குப் பேருணர்ச்சி தந்து போருக்கு நடத்திச் செல்லும் மூன்று மொழிகள்—கடவுள், நித்யத்வம், கடமை—என்பன. முதல் விஷயம் அறிவிற்கு அப்பாற்பட்டது; இரண்டாவது நம்பமுடியாதது; மூன்றாவது ஒருகாலும் அலட்சியம் செய்ய முடியாதது. மையர்ஸ்.

17 ஒருவர் தர்க்கவாதம் தவறாது அறிவிற்கு ஒத்தவண்ணம் போதனை செய்யலாம். அவர் கூறுவதில் பிழையொன்றும் இல்லாமல் இருக்கவும் கூடும். ஆயினும் அவரால் பிறர் ஒழுக்கத்தைத் திருத்தவோ அல்லது பிறர்க்கு உன்னத லட்சியத்தில் அவாவும் ஊக்கமும் உண்டாக்கவோ இயலாது. மார்லி.

18 ஆராய்ச்சியால் விளையும் ஆனந்தம் வேண்டுமா? அப்படியானால் நெஞ்சு நுண்ணிய விஷயங்களில் முற்றிலும் லயித்துப் போவதால் உண்டாகும் ஆநந்தத்தை அது கொள்ளை கொண்டுவிடும். லா புரூயர்.

19 நீதிதான் உலகத்தில் மனிதனுக்குத் தேவையான விஷயங்களில் சிறப்புடையதாகும். டானியல் வெப்ஸ்டர்.

20 பேரெண்ணங்கள்—உயர்ந்த உணர்ச்சிகள்—சிறந்த செயல்கள் இவை உடையவனே முழுதும் வாழ்பவன். அதாவது வாழ்வின் முழு இன்பமும் துய்ப்பவன். பெய்லி.

21 நாம் கண்டு அடைய முடியாததைத் தேடவே பிறந்துள்ளோம். ஆனால் அதைத் தேடுவதிலேயே அந்தமில் இன்பம் அமைந்துள்ளதாகும்.

---

காமம், லோபம், ஜீவவேட்கை ஆகிய இம்மூன்று பாசங்களிலிருந்து விடுபட்டவர்களுக்கு மரணத்திற்கும் அதன் பின்னிலைக்கும் பயம் வேண்டியதில்லை. அவர்களுக்கு துக்கமான புனர் ஜன்மமும் உண்டாகிறதில்லை. நிர்வாணமே லபிக்கும்.

22 கடவுளை அறிதல்—கடவுளிடம் அன்பு செலுத்துதல் இரண்டிற்கும் இடையிலுள்ள தூரம் எவராலும் இவ்வளவு என்று இயம்ப இயலாது. பாஸ்கல்.

23 நன்மை செய்ய முயலுதல்—நன்மை இதுவென்று காண முயலுதல்—இரண்டில் கடினமானது எது? மார்லி.

24 சட்டங்கள் சிலந்திவலையை ஒக்கும். அவ்வலை சிறு ஈக்களைப் பிடித்துக் கொள்ளும். ஆனால் வண்டுகளும் குளவிகளும் அதனூடு பாய்ந்தோடி விடும். ஸ்விட்.

25 சினம் என்பது உண்மையாகவே நம்மைச் சிறிதுபொழுது பிடித்தாட்டும் பைத்தியமே யாகும். ஸ்விட்.

26 மனோ தைர்யம் இன்றேல் வாய்மையும் இல்லை. வாய்மை இன்றேல் பிற அறங்களும் இல. ஸ்காட்.

27 எல்லாம் செயற்கைப் பொருள்களே. இயற்கையும் இறைவனால் செய்யப்பட்டதே. ஸர் தாமஸ் ப்ரௌன்.

28 உலகில் பெரியார் ஒருவர் தோன்றினால் அவரை நாம் அறிந்து கொள்வதற்குரிய அடையாளம் மூடர் அனைவரும் அவருக்கு விரோதமாகக் கூடி வேலை செய்வதே. ஸ்விட்.

29 ஒருபொழுதும் ஜயம் அறியாதவரே ஜயம் மிக இனியது என்பர். எமிலி டிக்கின்ஸன்.

30 அனைவருக்கு மன்றித் தங்களுக்கு மட்டுமே சுதந்தரம் விரும்புபவர் கடைப்பட்ட அடிமைகளே யாவர். லவல்.

31 தோல்வியிலும் துக்ககரமான விஷயம் ஒன்றே ஒன்றுதான் உண்டு. ஜயமே அது. ஐரோப்பியப் பழமொழி,

32 உலகத்தில் மனிதனைவிட உயர்ந்த பொருள் இல்லை. மனிதனில் மனத்தைவிட உயர்ந்த பொருள் இல்லை.

33 தம் துன்பத்தைப் பிறரையும் அனுபவிக்கச் செய்வது பெரியோர்க்கு அடுத்ததன்று. டிவாக்ஸ்.

34 கடவுள் ஒருவருக்குத்தான் போதுமான நேரமுண்டு. ஆனால் காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ளத் தெரியும் அறிஞனுக்கு தனக்குத் தேவையான காலத்தைத் தேடிக்கொள்ளச் சக்தி உண்டு. லவல்.

35 தங்கள் அபிப்பிராயத்தை ஒருபொழுதும் மாற்றிக்கொள்ளாதவர் மூடரும் இறந்தவருமே. லவல்.

36 ஒரு பிராணி வாழ நீ ஆனந்திக்கும் அளவே நீ அதை அறிய முடியும். வேறு வழியில் முடியாது. ரஸ்கின்.

---

அதருமிக்கு நஷ்டம் ஐந்துவிதம்—சோம்பல், தரித்திரம், துஷ்கீர்த்தி, கேவலம், விசனம். இவை ஜீவனோடு இருக்கும்போது மரணத்திற்குப் பிறகு மனதிற்கு நரகம். கர்மம் இருப்பது வரை துக்கமும் சங்கடமும் இருந்தே தீரும்.

37 உனக்குச் சந்தோஷம் தந்துகொள்ள நீ விரும்பினால் உன்னுடன் வாழுபவரின் குணாதிசயங்களைப்பற்றிச் சிந்திப்பாயாக. ஔரேலியஸ்.

38 தனிமையாயிருக்கச் சக்தியில்லாததினாலேயே சகல துன்பங்களும் விளைகின்றன. லா புரூயர்.

39 தன் விருப்பத்திற்குக் குறைவாய் அடைந்துள்ளவன் தன் தகுதிக்கு அதிகமாய் அடைந்திருப்பதாய் அறியக்கடவன் ஷோபனார்.

40 நமக்கு ஒரு விளக்குத் தேடிக்கொள்ள பிறன் ஒருவனுடைய நெருப்புக்குச் செல்லுதல் நலமே. ஆனால் நமக்காக ஒரு விளக்கு கொளுத்திக் கொள்ளாமல் அயலான் நெருப்பருகே வெகு காலம் தாமதித்தல் நலமன்று. ப்ளூடார்க்

51 அறிஞர் செய்யும் மூடக் காரியங்கள், சாமார்த்தியர் கூறும் அதிக்கிரமச் சொற்கள், சான்றோர் இழைக்கும் கொடுமைகள் இவைகளே புரட்சியுண்டு பண்ணுவன. டி. போனால்டு.

42 இருதயமே (அன்பே) பெரிய எண்ணங்களின் பிறப்பிடம். வாவனார்கூஸ்.

43 இன்பங் காண்பது எளிய காரியமன்று. நமக்குள்ளேயே காண்பது மிகக் கடினம். வேறெங்கேனும் காண்பதோ அசாத்தியம். ஷாம்பர்ட்.

44 நாம் எண்ணுகிறபடி நாம் ஒருபொழுதும் அவ்வளவு சந்தோஷமாயோ அல்லது சந்தோஷ மில்லாமலோ இருப்பதில்லை. லாரோஷிவக்கல்டு.

45 ஜனசமூகம்—ஜனசமூகமா? எத்தனை மூடர்கள சேர்ந்து ஒரு ஜன சமூகமாகின்றது. ஷாம்பர்ட்.

46 மனிதர் இருதயத்தின் குணாதிசயங்களை எள்ளளவும் மதிப்பதிலர்; ஆக்கை, அறிவு—இரண்டிலொன்றின் ஏற்றத்தையே போற்றுகின்றனர். லா புரூயர்

47 ஆதன்ஸ் நகரிலுள்ள நாங்கள் அழகானவைகளில் பிரியமுடையவர்கள். இருந்தாலும் எங்கள் சுவைகள் எளியவைகளே. ஆண்மையை இழக்காமல் ஆன்ம அபிவிருத்தி செய்கின்றோம். பெரிக்லீஸ்.

48 உலகிலுள்ள ஜனங்களில் பெரும்பாலோருடைய கல்வி யாது? ஒரு மூட்டை நூல்களை வாசித்தலா? அன்று. அடக்கம், ஒழுங்கு, அறம், நீதி இரண்டின் முன் மாதிரிகள்—இவைகளே அவர்கள் கல்வி. பர்க்.

49 மாணவர் அறிவதற்கு உத்தேசிக்கப்பட்டதை மட்டுமே அறியும் ஆசானை விட பயங்கரமான பொருள் ஒன்றும் உலகில் கிடையாது. கதே.

50 மனிதவர்க்கத்தை நிந்திப்பவன் தன்னிடத்திலோ அல்லது பிறரிடத்திலோ உள்ள உயர்ந்த பயனை ஒரு பொழுதும் பெறான். டாக்குவில்.

---

சத்தியம் மரணத்தை ஜயிக்கும். அது சர்வ வியாபி. சுவர்க்கமும் பூமியும் அழியும்பொழுதும் சத்தியத்திற்கு அழிவில்லை. நாசமில்லை. அது பலவல்ல ஒன்றேயாகும். எல்லாக் காலத்தும், எல்லாவிடத்தும், எல்லா அவஸ்தையிலும் அது ஒன்றேயாகும்.

# சங்கீத சாஸ்திரம்.

(இ. ச. சிவராமலிங்கம் பிள்ளை.)

## சங்கீத உற்பத்தி.

சர்வலோக சுகார்த்தமாக, ஆதியில், பரமேஸ்வரன் அருளால் அவருடைய அங்கப் பிரதிபிம்பமாக காந்தார சுரமும், பூமியும் உண்டாயின வென்றும், பிறகே பூமியிலிருந்து சரிய வாத்தியங்கள் உண்டாகி வாமதேவனிடத்திலிருந்து தைவத சுரமும் ஜலமும் தோன்றின வென்றும், அகோர சொரூபத்திலிருந்து ஷட்ஜர்ஷ சுரங்களும், அக்னியும் பிரத்தியக்ஷப் பட்டனவென்றும், அக்னியிலிருந்து காம்சிய வாத்தியங்களும், தத்புருஷனிடத்திருந்து பஞ்சம சுரமும், வாயுவும் ஜனித்தன வென்றும், வாயுவிலிருந்து தந்திரீ வாத்தியங்கள் புறப்பட்டன வென்றும், ஈசான முகத்திலிருந்து மத்திம நிஷாத சுரங்களும் ஆகாயமும் உண்டாயின வென்றும், ஆகாசத்திலிருந்து சப்தம் சாதகமாயிற்றென்றும் பரத முனிவரால் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. சங்கீத சாஸ்திரம் உலக சிருஷ்டியோடு கலந்த வொன்றென்று இதனால் அறியக்கிடக்கிறது. இதனால் தான் இது உண்டான காலத்தை நிர்ணயிக்க இடமில்லாமற் போயிற்று போலும்!

கீதம், வாத்தியம், நிருத்தியம் என்று மூன்று வகை சேர்ந்ததே சங்கீதமாகும்.

## சங்கீத விபாகம்.

மார்க்கம், தேசி என்று சங்கீதம் இரண்டுவிதமாகும். பரனஞ்ஞர்களால் பிரயோகிக்கப்படுகிற சங்கீதம் மார்க்கமும், அந்தந்த நாடுகள் அநுசரித்து அந்தந்த ஜனங்களுக்கு ரஞ்சிதமாகும் வண்ணமுள்ள சங்கீதம் தேசியுமாகும்.

## நாதசப்தார்த்தம்.

பிராண அக்நியினுடைய கூட்டுறவு கொண்டு உண்டாவதே நாதமாகும். நாகாரம் பிராணனையும், தகாரம் அக்நியையும் குறிக்கும்.

## நாத உற்பத்தி.

சப்தம் அல்லது ஒலியை உண்டாக்குவிப்பதற்கு விசாரிக்கப்படுகிற தோரணையில் ஆத்மாவானது மனதை உத்போதம் செய்கிறது. மனசானது

---

தர்ம மார்க்கத்தை சத்தியம் படிப்பிக்கும். சத்தியத்தைத் தேடுபவர்களுக்கு (மார்க்கம்) வழியானது வெகு சீக்கிரத்தில் தெளிவாகும்.

நாபியில் ஸ்திதி செய்துகொண்டிருக்கிற அக்கினியை சம்பாதித்துக்கொள்கிறது. அந்த அக்னியானது வாயுவைப் பிரேரிக்கும்போது பிரம்ம கிரந்தியில் ஸ்திதி செய்கிற நாதம் ஊர்த்துவ மார்க்கமாக சலனம் செய்து கிரமமாக நாபி, இருதயம், கண்டம், மூருத்தாவு, முகம் என்றிவற்றோடு சேர்ந்து பகிர்க்கதமாகிறது.

## நாத விபாகம்.

ஆஹத மென்றும், அநாஹத மென்றும் நாதமானது இரண்டுவிதமாகும். ஏகாக்கிரச் சித்தமுடைய முனிவர்களால் குருமுகமாக உபாஸிக்கப்படுவது அநாஹத மென்றும், அது சக்திவிஹீனத்துவம் காரணமாக ஜனங்களுக்கு ரஞ்சிதமாய் இராததால் லோக ராஜகம், பவ பஞ்சகமானவற்றை சுருதி உபாயங்களால் சாதிப்பது ஆஹதம் என்றும் கூறப்படும்.

## நாதப் பிரசம்சம்.

கீதம், சுரம், ராகம் என்றிவை நாதத்தைச் சேர்ந்தவை. இம்மூன்றும், நாதாரமங்களென்று சொல்லப்படுகின்றன. கீதத்திற்கு முக்கியமான வாத்தியம் நாதத்தால் பிரசித்தமாகும். நிருத்தியமானது கீத வாத்தியங்களுடன் அநுசரிக்கிறது. ஆகையால் இம்மூன்றும் நாதாதீனங்களாகும். இதுமாத்திரமன்றி நாதத்திலிருந்து அக்ஷரமும், அக்ஷரத்திலிருந்து பதமும், பதத்திலிருந்து வாக்கியமும், வாக்கியத்திலிருந்து விவகாரமும் உண்டாவதால் உலகமானது நாதாதீனமாமென்று சொல்லப்படுகிறது. நாதத்தை உபாஸிப்பதினுல் பிரம்ம விஷ்ணு மகேஸ்வரர்கள் உபாஸிதர்களாகின்றனர். ஆதலால், திரிமூர்த்திகளும் நாதாத்மர்களாகின்றனர். அன்றியும் தர்மார்த்த காம மோக்ஷங்கள் ஒவ்வொன்றிலும் நாதம் சாதனமாயிட்டுள்ள தாகையால், சரஸ்வதி தேவியின் அநுக்கிரகத்தால் சிரேஷ்டமான நாத வித்தையை யுடைய கம்பலம், அசுவதரம் என்ற சர்ப்பங்கள் மகாதேவனைச் சந்தோஷப்படுத்திக் கர்ணுபரணங்களாயின. சிசுக்களும், பசுக்களும் மிருகங்களும் சர்ப்பங்களும் இந்நாதங்கொண்டு ஆனந்த பரவசமாகும். இத்தகைய மகாத்மியங் கொண்ட நாதத்தின் பெருமையை எவரால் வர்ணிக்க முடியும்?

## நாத விவகாரம்.

நாத விவகாரமானது மூன்று விதங்களாகக் கணிக்கப்பட்டிருக்கிறது. இருதயத்தில் விவகரிப்படுவதற்கு மந்திர மென்றும், கண்டத்தில் விவகரிக்கப்படுவதற்கு மத்தியமென்றும், சிரசில் விவகரிக்கப்படுவதற்குத் தாரமென்றும் பெயர்களாகின்றன. மந்திரத்திற்குப் பிரமாணமாயிருக்கிற நாதத்தினுடைய இரட்டிப்பு தாரத்திற்கு நாதமுண்டாயிருக்கிறது.

## நாத சுருதி ஜாதி ராகங்கள்.

முதன் முதல் கேட்கப்படுகிற கிரகசுவக்ஷர உச்சாரண சப்தத்தைச் சுருதி என்று கூறுவர். இந்தச் சுருதியைச் சுராவயமாய்க் கற்பித்து, சுருதியிலிருந்து சுரங்களும், சுரங்களிலிருந்து கிராமங்களும், கிராமங்களிலிருந்து ஜாதிகளும் ராகங்களும் உற்பத்தியாயின.

---

சத்தியத்திலிருப்பவன் பாக்கியவான். மற்றெல்லாம் நசித்துப்போகும்; சத்தியம் மாத்திரம் சாசுவதமாயிருக்கும்.

### சுருதி ஜாதி விபாகம்.

தீப்தம், ஆயதம், கருணம், மிருது, மத்திபம் என்ற ஐந்து ஜாதிகளே சுருதியாகும். தீப்த ஜாதியில், தீவிரு, ரௌத்திரு, வஜ்ஜிருக, உக்கிரா என்றும், ஆயத ஜாதியில் குமுதுவதி, குரோதி, பிரசாரிணி ஸந்தீபினி, ரோகிணி என்றும், கருண ஜாதியில் தயாவதி, ஆலாபினி, மதந்தி என்றும், மிருது ஜாதியில் மந்த, ரதிக, பிரீதி, க்ஷிதி என்றும், மத்திபஜாதியில் சந்தோவதி, ரஞ்சனி, மார்ஜினி, ரக்த, ரம்மியா, க்ஷோபினி என்றும் பேதங்களுண்டு. அதனால், இவைகள் சுவற்பன சுரங்களில் விவஸ்தை உள்ளவையாயிருக்கும்.

### சுருதிகளுடைய ஸ்திதி.

ஷட்ஜத்திற்கு நான்கு சுருதிகளும், ரிஷபத்திற்கு மூன்றும், காந்தாரத்திற்கு இரண்டும், மத்திமத்திற்கு நானகும், பஞ்சமத்திற்கு நான்கும், தைவதத்திற்கு மூன்றும், நிஷாதத்திற்கு இரண்டுமாக எழு சுரங்களுக்கு இருபத்திரண்டு சுருதிகளுண்டு.

### துவாபிம்ச சுருதி நாமங்கள்.

ஷட்ஜத்திற்கு தீவ்விரு, குமுதுவந்தி, மந்த, சந்தோபதி என்ற நான்கு சுருதிகளும், ரிஷபத்திற்கு தயாவதி, ராஜனி, ரதிக, என்ற மூன்று சுருதிகளும. காந்தாரத்திற்கு ரௌத்திரி, குரோதி என்ற இரண்டு சுருதிகளும், மத்திமத்திற்கு வஜ்ஜிருக, பிரசாரிணி, பிரீதி, மார்ஜ்ஜினி என்ற நாலு சுருதிகளும், தைவதத்திற்கு, மதந்தி, ரோகிணி, ரம்மியா என்ற மூன்று சுருதிகளும் நிஷாதத்திற்கு உககிரா, க்ஷோபிணி என்ற இரண்டு சுருதிகளுமாகும்.

### நியத சுருதி நிர்மாணம்.

மேலே சொல்லப்பட்ட சப்த சுரங்களுக்குள்ள இருபத்திரண்டு சுருதிகளில்;நான்காவதாகிய சுருதியிலே ஷட்ஜமமும், ஏழாவதிலே ரிஷபமும், ஒன்பதாமதிலே காந்தாரமும், பதின்மூன்ருவதிலே மத்திமமும், பதினேழாவதிலே பஞ்சமமும், இருபதாவதிலே தைவதமும், இருபத்திரண்டாமதிலே நிஷாதமும், சுத்த சுருதிகளும் பாக்கியுள்ள விக்கிருதி சுருதிகளும் ஆகும்.

### சுரசப்தார்த்தம்.

சுரோதாவினுடைய மனதைச் சுயமாக ரஞ்சிக்கச் செய்வதே சுரமாகும்.

### சப்த சுர நாமங்கள்.

ஷட்ஜமம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பனவாம்.

### சுர உற்பத்தி ஸ்தானங்கள்.

நாசி, கண்டம். உரசு, நாக்கு, ஜிக்வா, தந்தம் இவை முதஸ்தானத்திலிருந்து புறப்படுகிற சுரமாகும். ஷட்ஜம் ரிஷபம் தொடங்கிய சுரங்கள்

---

சத்தியத்தை விளக்காகக் கண்டு, சத்தியத்தோடொத்து நடக்கிறவர்களுக்கு பிறருடைய சகாயம் தேவையில்லை. அவர்களுக்குப் பாமபதங் கிடைக்கும்.

ஆறும் ஷட்ஜமத்திலிருந்து உற்பவித்தாகக் கொண்டு ஷட்ஜம் என்ற பேருண்டாயிற்று. (2) காளையினுடைய சப்தத்திலிருந்து அநுசரித்ததே ரிஷப சுரமாகும். (3) காந்தார வாசிகளுடைய ரஞ்சிதத் தொனியே காந்தார சுரமென்று சொல்லப்படுகிறது. (4) சப்த சுரங்களுடைய மத்திய ஸ்தானத்தை அடைவதால் மத்திமம் என்றும், (5) ஐந்தாவதாக இருப்பதால் பஞ்சமம், அன்றியும் நாபி, இருதயம், கண்டம் மிருர்த்தாவு ஆசியம் ஆகியவற்றைத் (ஐந்து ஸ்தானங்களை) தொட்டுவருவதாலும் அப்பேருண்டாயிற்று. (6) தீமானர்களைச் சம்பந்திப்பதால் தைவதமென்னலாயிற்று. (7) நிஷாத சுரத்தில் மனம் ஈடுபடுகிறது. ஆதலால் ஏழாவது சுரத்திற்கு நிஷாதமென்று பேருண்டாயிற்று. ஷட்ரஸோ அன்னத்தை மனிதர் புசிப்பதுபோல நிஷாதத்தைச் சாசகர்கள் ஆறு சுரங்களைக் கொண்டு சேவிக்கின்றார்கள்.

சுரவிபாகம்.

சுரங்கள் பிரகிருதி (சுத்தம்) விகிருதி என்று இரண்டு வித நியதங்களையுடையன. சுத்த சுருதிகளோடு கூடியுள்ள சுரங்கள் சுத்தமென்று சொல்லப்படுகிறது. சுத்த சுருதிகளில் கீழுள்ள சுருதிகளோ, மேலேயுள்ள சுருதிகளோ சேர்ந்திருக்கிறசுரங்களை விகுருதி சுரங்கள் என்று சொல்லுவர்.

சப்த சுர வாரங்கள்.

ஷட்ஜம், ஞாயிற்றுக்கிழமையிலும், ரிஷபம் திங்களிலும், காந்தாரம் செவ்வாயிலும், மத்திமம் புதனிலும், பஞ்சமம் வியாழனிலும், தைவதம் வெள்ளியிலும், நிஷாதம் சனியிலும் சாதகமாகும்.



புத்த பகவானுடையவும், குருவினுடையவும் உபதேசமெல்லாம் சத்தியமேயாகும். ஆகையால் அதனையே கைக்கொள்க; அதனையே அநுசரிக்க; அதனையே பிரஸ்தாபப்படுத்துக; அதிலேயே மூழ்குக.

# கனவின் பலன்

(வி. சங்கர ஐயர்.)

(26-ம் பக்கத் தொடர்ச்சி)

CAHPTER VI.

1 கறுப்பு நிறத்தையுடைய பூமியைக்காண்பது அதிக நஷ்டம்.

2 தான் நிற்கும் பூமி அசைவதாகக் கண்டால் ஆகவேண்டிய காரியம் ஆகாது.

3 பூகம்பம் உண்டானதாகக் கண்டால் குடும்பத்திற் கெல்லாம் கேடு.

4 தன் காலடியிலுள்ள தரைமாத்திரம் அசைவதாகக் கண்டால் காரிய நாசம்; பொருள் நஷ்டம்.

5 மலை குவிந்திருப்பதாகக்கண்டால் பந்துக்களில் பெரியவர் கெடுவர்.

6 தனக்குத் தெரிந்த பட்டணம் பூகம்பத்தினால் அசைவதாகக் கண்டால் அங்குள்ள தன் சினேகிதனுக்கு அதிக நஷ்டம்; அது தனக்கு தெரியாததானால் தூரபந்துவில் ஒருவனுக்கு அதிக நஷ்டம்.

7 கொல்லையில் சகல காயகறிகளும் நட்டிருப்பதாகக் கண்டால் விபத்துக்கள் ஏற்படும்.

8 பயிரில்லாத உழுத நிலத்தைக்கண்டால் தன் புத்திரர்களோடும் சினேகிதர்களோடும் விரோதம். வியாபாரிகளுக்கு நஷ்டம் சஞ்சலம்.

9 ஒரு குகையில் தனிமையாக நடப்பதாகச் சொப்பனங்கண்டால் ஏக்கம் நஷ்டம்.

10 அக்குகையில் தன் சினேகிதர்களைக் கண்டால் அவர்களோடு கலகமும் பகையும் நேரிடும்.

11 குகையில் குரூர மிருகங்களைக்கண்டால் புத்திர விரோதம்.

12 தான் தவறிக் குழியில் விழுந்ததாகக் கண்டால் இல்லாத ஆபத்துக்கள் நேரிடும்.

13 குயவர்கள் தோண்டிய பள்ளத்தில் வீழ்ந்ததாக கண்டால் விதந்துவோடு சம்போகம் நேரிட்டு அதனால் அவமானம் உண்டாகும்.

14 திவ்ய க்ஷேத்திர படங்களைக்கண்டால் பிரயாணம் நேரிடும்.

---

எல்லா அவஸ்தைகளுடைய பரிணாமம் சத்திய மாத்திரமேயாகும். சத்தியத்தை வகிக்கவே உலகங்கள் உற்பத்தியாகின்றன.

15 வீடு சாணியால் மெழுகினதாகக் கண்டால் கள்ளர்களால் சேதம்.

16 பல வீடுகள் நடுவிலிருப்பதாகக்கண்டால் காணுத தூரதேசப் பிரயாணம்.

17 அடர்ந்த கானகத்தில் திரிந்து கொண்டிருப்பதாகக் கண்டால் கஷ்ட முண்டாகும்.

18 சத்திரங்களில் இருப்பதாகக் கண்டால் காரியக்கேடு; தரித்திரம். சிறைவாசம், ஒருவரும் காணுமல் ஒளிந்து நடக்க கேரிடும். நோய் நீடிக்கும்.

19 சுவரின் மேலிருந்து தவறி வீழ்ந்ததாக கண்டால் உத்தியோகத் தில் குறைவு.

20 படிகளில்லாத பர்வதத்தின்மேல் கஷ்டத்தோடு நடப்பதாகக் கண்டால் அனேக ஆபத்துக்கள் உண்டாகும்.

21 மலை யுச்சியை அடைந்தால் ஆபத்து உண்டாகி நீங்கும்.

22 பர்வதத்தின் மேல் ஏறும்பொழுது நழுவி வீழ்ந்தாற்போல் கண் டால் அப்போது திசை குறைந்து போகும்.

23 மலை உச்சிக்குச் சேரு முன்னே நித்திரையினின்று விழித்துக் கொண்டால் விசாரமும் துக்கமும் நேரிடும்.

24 தனக்கு ஒருவர் மூலம் பூஸ்திதி கிடைத்ததுபோல் கனவு கண் டால் விவாக மாகாதவர்களுக்குக் குணவதியான பெண்ணேடு மணமாகும்.

24 (a) கலியாண மானவர் கண்டால் தனலாபம்.

25 தனக்குள்ள பூஸ்திதி வரம் பற்றதாய்க் காணில் ஏராளமான தனம் கிடைத்து விசேஷ சந்தோஷ மேற்படும்.

26 தன்னுடைய பூமியில் பயிர் செழிப்பாக விளைந்திருப்பதாகக் கண்டால் தனக்கு மிகுதியான தனலாபம்.

27 கொல்லையில் அல்லது வீட்டைச்சுற்றி பூஞ்சோலை பலவித கனிக ளுட னிருந்தாலும ஜலம் நிறைந்த கிணறு குளங்கள் இருப்பதாகக் கண்டா லும் பதிவிரதை ஆகிய ஸ்திரீ விவாகமாகி புகழுடைய் பிள்ளைகள் உண்டா கும்.

27 (a) பெண்ணுக்கு இவ்வித கனவானல் குணவந்தனை புருஷனை மணம் புரிவாள்.

27 (b) விவாக மானவர்களானல் பந்துக்களாலும் மற்றவர்களாலும் புகழ் தரக்கூடிய ஐசுவரிய லாபம்.

28 காயாமல் செழிப்பான பயிர் நிறைந்த வயலைச் சுற்றி வருவதாகப் பார்ப்பது ஐசுவரிய விருத்தி.

29 பயிர் நிறைந்த வயலின் நடுவில் போவதாகக் கண்டால் நஷ்ட மான சொத்து கிடைக்கும்.

---

சத்தியம் தருமத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. மோக்ஷத்தை இச்சித் தவர்களுடைய ஹிருதயத்தில் அது விளக்கமாகிறது.

30 நெற்பயிர் நட நாற்றுக் கட்டுக்களைப் பச்சையாகக் கட்டி வருவதாக அல்லது நிலத்தில் வைத்திருப்பதாகக் கண்டால் மனோ வியாகூலம் வியாதி முதலியவை நீங்கும்.

30 (a) மற்றவர்களுக்கு தனலாபம்.

31 வயலில் முதிர்ந்த கதிர்களைப் பார்த்தால் ஊக்கத்துடன் பிரயாசைப்பட்டுச் செய்யும் காரியங்களில் கஷ்டம் நேரிடாமல் லாபம் உண்டாகும்.

32 தான் நிலத்தை உழுவதாகவோ அன்னியர்கள் உழுவதாகவோ கண்டால் மதிப்பு ஏற்படும்.

33 அகன்ற தெருவுகளில் நடப்பதாகக் கண்டால் கஷ்ட மில்லாத பிழைப்பும் சுகமும் உண்டாகும்.

34 மரமுள்ள சாலைகளில் நடப்பதாகக் கண்டால் தன்னை அடுத்த அனேகர்களால் போஷிக்கக்கூடிய செல்வமும் நன்னடைக்கையும் ஏற்படும்.

35 தான் மலைக் குகைகளிலிருந்து வெளியில் வந்ததாகக் கண்டால் இடர் நீங்கும்.

35 (a) இடரில்லாதவர் கண்டால் அரிய விருப்பமுள்ள ரகசியமான காரியங்கள் வெளியாகும்.

36 சுடுகாட்டைப் பார்த்தால் காரியசித்தி.

37 மனை கட்டுவதைக் காண்பது எண்ணிய காரியம் நிறைவேறும்.

38 வீடு பழுது பார்த்தால் நஷ்டமான சொத்து திரும்ப வரும்.

39 கட்டிக்கொண்டிருக்கிறதாகப் பார்த்தால் தனலாபம்.

40 நந்த வனத்தில் கனிகள் நிறைந்த தோட்டங்களில் நடந்து கொண்டிருப்பதாகக் கண்டால் எண்ணும்படியான போகபோக்கியங்களுண்டாகும்.

41 கோபுரத்தின்மேல், மலையின்மேல், சுவரின்மேல், அல்லது மெத்தையின் மீது ஏறினாற்போல் கண்டால் விசேஷ லாபம், புகழ், மேலோர் மதிப்பு.

41 (a) அன்னியர் ஏறுவதைப் பார்த்தால் புகழ்வரும் சமாசாரம் கேள்விப் படும்.

41 (b) மேற்சொன்னவைகளைத் தாண்டினாற்போல் கண்டால் இக் கட்டு நீங்கும்.

# எவன் வைணவன்?



(ஆசிரியர். தே. வீரராகவ ஐயங்கார்.)

அகவற்பா.

உலகத் தீரே! உலகத் தீரே!
உண்மை வைணவன் உறுகுணங் கேண்மோ
பிறருடை யாந்தை பிழைபடா தறிந்து
விரைந்தவண் சென்று வீழ்த்து மவர்துயர்
நீக்கிக் கொஞ்சமும் நெஞ்சினிற் செருக்கு
இல்லானாகி யிறைஞ்சி நடக்கும்
பண்பை யுடைய மானவன் வைணவன்.
சகத்துளோர் சாற்றும் சமரசத் தன்மைகொண்
டகண்ட புவனம் அடக்கும் மாந்தரை
யேற்றிப் புனைந்து இகழா திறையும்
மானமும் பொறையும் மையறு மெய்யும்
அறுவகைக் கள்வர் அலைக்கும் மனனொடு
கச்ச மிவற்றைக் காசறப் புரந்து
அறம்பல பயின்று அருள்மிக வீந்து
பெற்ற வன்னையும் பெரிதும் போற்ற
வாழு மானவன் வைணவ னவனே.
நான்முகன் படைத்த நானில மதனில்
மக்கள் முதற்கொடு மாக்க ளீறாய்
'எல்லா உயிரிலும் யானே யுளனென'க்
கண்ணன் கீதையிற் கனிவுடன் கழறிய
அன்புடை மொழியை யகத்தினி னிறுத்திப்
புந்தியா லுரைசெயற் பொதுமை நோக்கனும்
அற்றது பற்றெனில் அடையலாம் வீடெனப்
பழியிழி வடையும் பாசம் போக்கியும்
பிறர் தாரத்தைப் பெற்ற தாயாகப்
பேணும் பான்மைப் பெரிதெனக் காட்டியும்
மெய்யே யன்றிப் பொய்யொன் றறியான்
வாழு மானவன் வைணவ னவனே.
போகம் போக்கி மோகம் மாய்த்து
மற்கடத் தன்மை மனதை விராகம்
எனும்பா சத்தா லியல்புறப் பிணித்து
எப்பொரு ளுள்ளும் எங்கணும் பரந்து
நிற்கும் ஈசனின் நின்மலப் பெயரைக்
காதினாற் கேட்பின் கண்ணீர் மல்கி
மெய்யிற் பாய மேனிப் புளகித்

---

சத்தியம் புத்தியைச் சேர்ந்தேயிருக்கிறது: புத்தியில்லாமல் ஒரு சத்தியமுமில்லை.

தானந்தக் கடல் ஆடுவோன் வைணவன்.
அன்னவன் தூயோன் ஆகத்தி லெல்லாப்
புண்ணிய தீர்த்தமும் நண்ணிப் பொருந்தும்
வஞ்சமும் விஞ்சு வாதும் கோபமும்
எஞ்சலின்றி யாவையும் நீத்து
ரமிக்கச் செய்யும் ராம நாமத்தைக்
காப்பாக் கொள்ளும் கண்ணியன் வைணவன்
இத்தகையோனை யெதிரிடுபவர்தம்
ஏழெழு பிறப்பும் ஈடே றும்மே.

குறிப்பு:-[மேற்கண்ட பாவிலடங்கி யிருக்கும் பொருள்களைக்கொண்ட "வைஷ்ணுவ ஜனதோ" என்று தொடங்கும் ஹிந்திபாடல் மகாத்மா காந்தி யடிகளுக்கு மிகவும் பிரியமானது. அடிகளால் அனவரதமும் பாடப்படுவ தாகும். தே. வீ.]



சத்தியத்தைப் பரிசீலனை செய்து அறிந்துகொள். ஆப்தவசனம் என்ப தற்காக ஒப்புக்கொள்ளவேண்டாம்.




# ஸர். தி. முத்துசாமி ஐயர்.

(வி. எஸ். ராமசாமி.)

(69-ம் பக்கத் தொடர்ச்சி.)

முத்துசாமி ஐயர் முனிசிப் வேலையை விட்டு விட்டு டெபுடி கலெக்டராக இருந்தார். அப்போது கலெக்டர் அவரை விசாரிக்கச் சொன்ன பெருங் கேஸ் ஒன்றில் ஜான்புரூஸ் நார்ட்டன் வக்கீலாக ஆஜரா யிருந்தார். பின்பு நார்ட்டன் துரை சென்னைக்குத் திரும்பிவந்து தமது சிநேகிதர் ஹாலொவே துரையையும், ஸர். அலெக்ஸாண்டர் அர்பத்நட் துரையையும் கண்டபொழுது, 'உயர்ந்த நீதிபதிகட்குரிய சாமர்த்தியங்கள் ரெவினியூ இலாகாவில் பயனில்லாது பாழடைகின்றன' என்றுரைத்துப் பெருந் துக்கத்தை யடைந்தார்.

இதன்பின் (1865-ல்) தென் கன்னடத்தில் சப் ஜட்ஜாக நியமிக்கப்பட்டார். 1868-ல் போலீஸ் மாஜிஸ்ட்ரேட்டாக சென்னைக்கு மாற்றப்பட்டார். இவ் வுத்தியோகத்தி லிருக்கும்போதே ஹாலொவே துரையின் உதவியால் நியாய சாஸ்திரத்தின் அதிநுட்பங்களை நன்கு அறிந்துகொண்டார். அவர் மாஜிஸ்ட்ரேட் உத்தியோகத்தில் இருக்கும்போதே, ஒழிந்த நேரங்களிற் படித்து, பி. எல். பரீக்ஷையில் முதல் வகுப்பில் தேர்ச்சியடைந்தார். அவர் பின்னர் சென்னை ஸ்மால்காஸ் கோர்ட்டில் ஒரு ஜட்ஜாக நியமிக்கப்பட்டார். அவருடைய வேலைத் திறமையை மெச்சி, ஆக்டிங் கவர்னரா யிருந்த ஸர். அலெக்ஸான்டர் அர்பத்நட், அவரைத் தஞ்சாவூர் ஜில்லா ஜட்ஜாக நியமிக்கப் பிரயத்தனப்பட்டார். ஆனால் ஒன்றும் பயன்படவில்லை. 1877-ல் டில்லியில்கூடிய தர்பாருக்குப் போகும்படி மதராஸ் கவர்ன்மெண்டார் அவரை வேண்டினார்கள். அவ்வாறே சென்று ராஜப் பிரதிநிதியால் ஒரு பொற் பதக்கம் அளிக்கப்பெற்றார். 1878-ல் ஸி. ஐ. இ. பட்டம் கிடைத்தது. அதே வருஷத்தில் முத்துசாமி ஐயர் ஹைகோர்ட்டு நீதிபதி யாயினார்.

இந்தியருள் அவ்வளவு உயர்ந்த பதவிக்கு வந்தவர்கள் அவருக்குமுன் ஒருவரும் இல்லை. கொஞ்ச காலத்திற்குள் சிறந்த ஜட்ஜுகளுள் ஒருவரென

---

கூட்டுச் சேருகின்ற பொருள்களெல்லாம் நாசத்தை அடையும். சத்தியும் ஒன்றே சாசுவதமாயுள்ளது. ஆகையால் சிரத்தையோடு முத்திக்காக யத்தனஞ் செய்யுங்கள்.

எங்கும் அவரின் பெயர் முழங்கிற்று. சிலநாளில் கே. ஸி. ஐ. இ. பட்டமும் பெற்றார். இந்தியரும் ஐரோப்பியரும் ஒருங்கே இவரை வாழ்த்தினார்கள். 1895-ம் வருடத்தில் திடீரென்று நோயுற்றுத் தம் தேசத்தவரெல்லாம் துக்க முற இவ் வுலகம்விட்டுப் பரலோக மடைந்தார்.

இவர் பாலிய முதற்கொண்டே சுறுசுறுப்பும் பொறுமையும் நன்னடக் கையும் அடைந்தார். கலாசாலையில் வாசிக்கும்போது சிநேகிதரும், உபாத்தி யாயர்களும் அவரை மெச்சினார்கள். அடக்கமும் பணிவும் அவரிடத்துக் காணப்பட்டச் சிறந்த குணங்களாகும். இவ்வளவு அருங்குணமும் நுண்ணறிவு மமைந்த இம் மகான் வாழ்க்கை கற்றோர்க்கே அன்றி மற்றுளோர்க்கும் நிதர் சன மாகல்வேண்டி அவரது பிரதிமை யொன்று சென்னைமா நகர் உயர் நீதி ஸ்தலத்தில் நீதிபதிக ளிருக்கைகளுக்கு அணித்ததாக வைத்துப் போற்றப் பட்டு வருகிறது.

---

## ஜார்ஜ் ஸ்டீவன்ஸன்

உலகத்தில் 'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார், தோன்றலிற் றோன்றாமை நன்று' என்பதைப் பூர்த்தி செய்துகொண்டு விளங்கா நின்ற யந் திர ஆராய்ச்சி நிபுணர்களில் ஜார்ஜ் ஸ்டீவன்ஸன் என்பவர்தான் முதன் முத லில் உயரிய நீராவி யந்திரங்களைக் கண்டுபிடித்தார். உலகத்திலுள்ள ஜனங் களி னூடே மிக எளிய குடும்பத்தில் ஜனித்து, மற்றுள்ள மானிடர்களுக்கும், வர்த்தகர்களுக்கும் அதிசீக்கிரத்தில் அயல் நாட்டைப் போய்ச் சேரவும், சாமான்களை ஏற்றுமதி இறக்குமதி செய்யவும் ஓர் பேருதவி செய்து, தம் பெற்றோரின் பேருதவியின்றிப் பெருங்கியாதி பெற்றோங்கிய மகான் ஜார்ஜ் ஸ்டீவன்ஸனின் சரிதையை ஒவ்வொருவரும் தெரிந்திருப்பது மிகவும் அத்யா வசியமாம்.

### பிறப்பும் தொழிலும்

ஜார்ஜ் ஸ்டீவன்ஸன் 1781-வது வருஷத்தில் பிறந்தவர். இவர் மற்ற வர்களைப்போலவே சாதாரணமாகக் காலங்கழித்து வந்தார். கரிச் சுரங்கத்தில் கரிகளை வெளியே எடுத்துப்போடும் வேலையையுஞ் செய்து வந்தார். இவர் இவ் வேலையிலிருந்து நெருப் பெரிப்பவனுக்கு உதவியா யிருந்தார். நியூ காஸிலின் அருகேயுள்ள ஒரு கரிச் சுரங்கத்தில் வேலைபார்த்து வந்தார். சிறிது காலம் சென்றபின் யந்திர விதி யறிந்தவரானார்.

### நீராவி யந்திர ஆராய்ச்சி

ஸ்டீவன்ஸன் டைன் நதிக்கரையி லிருந்து லண்டனுக்குக் கப்பல் மூல மாய் நிலக்கரிகளை யேற்றி யனுப்பும் இடத்தில் புதியதோர் வீட்டில் காலங் கழித்து வந்தார். ஆங்கு நல்லதோர் பெண்ணை மணம் புரிந்து குடும்பஸ்த ரானார். பின்னர் ஸ்டீவன்ஸன் மலைமீது கரிகளைக் கொண்டுபோகும் யந்தி ரத்தை நடத்தி வந்தார். இவர், தம் காலம் முழுவதையும், கரி வண்டிகளை இழுத்துச் செல்லும் யந்திர மொன்றை உற்பத்தி செய்யும் வழிகளையே அறி வதில் கழித்துவந்தார். டிரிவெதிக் என்னும் மகான் கண்டுபிடித்த நீராவி

---

மூடன் சுயநல அபிமானத்தால் மோஹமுள்ளவனாக விருக்கிறான், ஞானி விவேகியானவன்) சத்தியத்தில் ஜீவிக்கிறான்.

யந்திரத்தைப் பார்த்து அதினினும் உயர்தரமான ஒன்றைத் தாம் செய்யக்கூடுமெனத் தெரிவித்தார். ஸ்டீவன்ஸன், சுரங்கத்தின் சொந்தக்காரரிடம், தாம் புதியதோர், 'டிராவலிங் என்ஜின்' (Travelling Engine) செய்யக் கூடுமென்று கூறினர். அவ்வாறே அவ் விஞ்ஜின் செய்வதற்குத் தொகை அவரிடம் கொடுக்கப்பட்டது. அவர் பிலட்சர் (Blutchers) என்னும் புதிய இயந்திரத்தைப் பத்து மாதத்திற்குள் தயாரித்தார். அவ் வியந்திரம் ஆட்சியி லிருந்த மற்ற யந்திரங்களைக் காட்டிலும் அதிகச் சிறப்பாயும், உயரிய முறையிலும் பெரிதும் வெற்றி தரக்கூடியதுமாய் இருந்தது. அன்றியும் இது. 1-மணிக்கு 4-மைல் வீதம், 30 டன் நிறைகொண்ட பளுவேற்றப்பட்ட 8 வண்டிகளை ஒரே தடவையில் தண்டவாளக் கம்பியின்மேல் இழுத்துச் செல்லும். இவ் வியந்திரம் சிறிது காலமேதான் இருந்தது. பிறகு கைப்பழக்கமில்லாததாய் விட்டது. ஆகையால் ஸ்டீவன்ஸனின் முயற்சியால் சிறந்த தொன்றைச் செய்ய நேர்ந்தது. ஸ்டீவன்ஸனுடைய முதல் யந்திரம் ஓடுகையில் பயங்கரமான சப்தத்தை வெளியிட்டதால், அச் சப்தம், குதிரை, ஆடு, மாடுகளையும் மிரளும்படி செய்துவிட்டதுமல்லாமல், எல்லோருக்கும் தொந்தரவையும் கொடுத்து வந்தது. பிறகு புகையைப் புகைக்கூண்டு வழியாக ஆகாயத்தில் போகும்படி செய்தார். அதனல் நல்ல காற்று உட்சென்று நெருப்பை நன்ருய் எரியச் செய்தது. இவ்வாறு செய்வதால் புகையும் விரைந்து செல்லலாயிற்று. இச் சூழ்ச்சி நீராவி யந்திரத்தின் விருத்திக்கு அனுகூலமாய் இருந்தது. அவர் 1815ல இரண்டாவது நீராவி யந்திரத்தைத் தயாரித்தார். இதனல் சக்கரங்களுககு விசை அதிகமாயிற்று. இவ் வனுகூலங்கள் மற்ற நீராவி யந்திரங்களிலும் கையாளப்பட்டு வந்தன. இந்த யந்திரம் அதிவேகத்தில் செல்லத்தக்க ரஸ்தாக்களும், தண்டவாளங்களும் ஸ்டீவன்ஸனல் வெகு உறுதியாய்ப் போடப்பட்டன. இது சுரங்கத்தில் கரி வண்டிகளை மிகவும் சுலபமாய் இழுத்துச் செல்ல லாயிற்று. இந்த யந்திரத்திற்கு பப்பிங் பில்லி (Puffing Billy) என்னும் பெயர் வைக்கப்பட்டது.

ஸ்டீவன்ஸனுடைய சிநேகிதர்கள், சாதாரண ரஸ்தாவில் செல்லக்கூடிய யந்திரத்தைச் செயயுமாறு அவரைக் கேட்டார்கள்.

ஸ்டீவன்ஸனுடைய மகன் ராபர்ட் என்பவன் வேலை செய்யக்கூடிய வயதை யடைந்து, கொஞ்ச காலம் சுரங்கங்களில வேலைபார்த்து வந்தான். பின் ஸ்டீவன்ஸன் தன் மகனை கலாசாலைக்குப் பயின்று வரும்படி அனுப்பினர். சில வருஷங்களில் ராபர்ட்டு இன்ஜினியர் பதவியை அடைந்தான். 1822-ல் ஒரு சுரங்கக் கம்பெனியார் 8 மைல் நீளமுள்ள ஒரு தண்டவாளத்தை யமைத்து அதில் ஓடுவதற்கு 5 நீராவியந்திரங்களை ஸ்டீவன்ஸனிடமிருந்து விலைக்கு வாங்கினர்கள். சம ரஸ்தாவில் 60 டன் நிறையுள்ள 17 நிலக்கரி வண்டிகளை யிழுத்துக்கொண்டு அந்த யந்திரம் 1-மணிக்கு 4-மைல் வீதம் சென்றது. இவ்விதம் கரிகளைக்கொண்டு போவதற்காக யந்திரங்கள் மலியவே இங்கிலாந்தின் மற்ற பாகங்களில் ரஸ்தாவை முன்பு இருந்ததைக் காட்டிலும் அதிக நீளமாக்கி, ஷை யந்திரங்களின் மூலமாக ஜனங்களையும சாமான்களையும் ஏற்றிச்செல்ல முயற்சி செய்தார்கள். இவ்வாறு நீராவி யந்திரம் பெருகிவிடவே, கால் நடைகளுக்கு இவை பிரதிகூலமாயின. ஸ்டீவன்ஸனை நகரி

---

தருமிக்கு லாபம் ஐந்து—விவசாயத்தால் தனம், சத்கீர்த்தி, தைரியம், சுகம், நல்லகதி. கர்மம் இருக்கும்வரை சுகமும் சமாதானமும்.

ளுள்ள ஜனங்கள் நீராவி யந்திரம் மணிக்கு 9, 10 மைல் ஓடிக் கொண்டிருப்பதால், அவ் வியந்திரத்தி னிடையில் ஒரு பசு அகப்பட்டுக் கொண்டால் அதன் கதி என்னவாகும் என்று கேட்கலானார்கள். இவ்வித அசந்தர்ப்பக் கேள்விகள் பல உண்டாகியும் அவற்றிற்கெல்லாம் அவர் ஒவ்வோர் வித சமாதானஞ் சொல்லி, எல்லா இடங்களிலும் இருப்புப்பாதைகளைப் போட ஆரம்பித்து வண்டிகளை விடத் தொடங்கினார். ஆரம்பத்தில் இவ் வேடிக்கையைப் பார்க்கக் கூட்டங் கூட்டமாய் ஜனங்கள் கூடினார்கள். பின்பு ஸ்டிவன்ஸனே 34 வண்டிகளில் நிலக்கரிகளையும், சாமான்களையும் 450 ஜனங்களையும் ஏற்றிக் கொண்டு யந்திரத்தை நடத்தினார்.

முதலில் 1 மணி 5 நிமிஷத்தில் இவ் வண்டித் தொடர் 9-மைல் வரை சென்றது. வண்டியின் வேகம் மணிக்கு 4 மைலிலிருந்து 12 மைல் வரையில் விருத்தியடைந்து வந்தது. கௌரவ அந்தஸ்தை மேற்கொண்ட பிரபுக்கள் இவ்வண்டித் தொடரில் தங்கள் சாமான்களை மாத்திரம் ஏற்றி யனுப்பி விட்டுத் தாங்கள் தங்கள் சொந்தக் குதிரை வண்டிகளில் ஏறிச் செல்லலாயினர். 1842-ல் விக்டோரியா மகாராணியார் இந்த இருப்புப் பாதையில் லண்டன் நகரத்திலிருந்து விண்ட்ஸர் என்னுமிடத்திற்குச் சென்றார். அப்பொழுதுதான் கௌரவம் பாராட்டின தனவந்தர்களும் இந்த இருப்புப்பாதை மார்க்கமாகச் செல்ல முன்வந்தார்கள்.

# இந்தியாவின் ஜாதி முறை

(எஸ். ஏ. தியாகராஜ்.)

ஜாதிமுறை என்பது இந்தியாவிலேதான் விநோதமாகக் காணப் படுகின்றது. இம்முறை இப்பொழுது தோன்றியதல்ல. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே ஜாதிமுறை இந்தியாவின் கண் தோன் றியதாகத் தோற்றுகிறது. ஜாதியின் உற்பத்தியைப் பலர் பல விதங்களாகக் கூறுவர். ஜாதியையும் வர்ணத்தையும் ஒன்றாகப்பாவித்து இவ்விரண்டும் ஒன்றெனக் கூறி வர்ணத்தாலேயே ஜாதி உண்டானதெனக் கூறுவர் சிலர். வெள்ளை நிறத்தவர் பிராமணர்களென்றும், சிவப்பு நிறத்தவர் க்ஷத்திரியரென் றும், மஞ்சள் நிறத்தவர் வைசியரென்றும், கருப்பு நிறத்தவர் சூத்திரர் என் றும் கூறுவர். பின்னும் ஒரு சாரார் கடவுளின் திருமேனியில் முறையே வாய், புஜம், தொடை, பாதம், இவைகளிற்றோன்றிய நால்வர் பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்றும், மற்றும் ஒரு சாரார் அக்கினியில் நால்வர் தோன்றினர் அவரே நான்கு ஜாதியாகப் பிரிந்தனரென்றும், பின் னும் சிலர் தேக ஆரோக்கியத்திற்காகச் சுத்தத்தின் நிமித்தம் பல ஜாதிகளா கப் பிரிக்கப்பட் டிருக்கின்றனரென்றும், இன்னும் சிலர் சில குடும்பத்தார் தாம் கற்ற கைத்தொழில்களைப் பிறருக்குக் காட்டாவண்ணம் அத்தொழி லையே விருத்தி செய்யக் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து தனித்தனி ஜாதியா ராகச் சேர்ந்தனரென்றும் பகராநிற்பர். இவை பல கேள்விகளுக்கும் தடங் கல்களுக்கும் இடமாக நிற்கின்றன.

மத்திய ஆசியாவிலிருந்து இந்தியாவிற்கு வந்த முதல் ஆரியர் கூட் டத்தார் வடஇந்தியாவில் திராவிடர்களை முறி அடித்துச் சந்தோஷமாகக் காலங்கழித்து வந்தனர். இவர்கள் பெண்டுபிள்ளைகளுடன் வந்து சேர்ந்தமை யால் தங்கள் மட்டிலேயே வேலைகளைப் பார்த்து வந்தனர். இரண்டாவது முறைவந்த ஆரியர்கள் ஆடவர்களாக வந்தத னிமித்தம் மற்றப் பூர்வீக இந்தி யர்களுடன் கலக்க நேரிட இதைக்கண்ட ஆரியர்கள் நான்கு ஜாதிகளாகப் பிரி த்துக் கொண்டார்கள். அவைகள் பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திர வகுப் புகளாகும். பிராமணர்களின் தொழிலாவது மற்றைய ஜாதியாருக்கு நன்மை பயக்கக் கடவுளைப் பிரார்த்திப்பதும், வேதம் ஓதுதலும், பணக்காரராக விருந் தால் பிறருக்குப் பொருள் கொடுத்து உதவுவதும், எளியவர்களாயிருந்தால் ஐயமெடுத்துண்டு தம்மைக் காத்துக்கொள்வதுமே. க்ஷத்திரியர்களின் தொழி லாவது தம்முடைய புஜபல பராக்கிரமத்தால் விரோதிகளை வென்று தமது பிரஜைகளைப் பாதுகாப்பது. வைசியர்கள் வியாபாரம் செய்து பொருளீட்ட வும் உழவுத்தொழில் புரிந்து நாட்டை வளர்க்கவும் வேண்டும். சூத்திரர்

---

புத்தியில் உரசப்பட்ட மனமானது, காமம் லோபம், மோகம், மாயை என்றிவைகளிலிருந்து வேறுபட்டிருக்கும்.

கள் மேற்கூறிய ஜாதியார்களுக்குத் தொண்டு புரிந்து அடிமை யாவதே. மனு தர்ம சாஸ்திரத்தில் அந்தணர்கள் கடவுளின் அவதாரமென்றும் அவர்களுக்குச் சர்வசுதந்தரமும் அளிக்க வேண்டுமென்றும் கூறி யிருக்கிறது. ஆகவே பிராமணர்கள் உயர்ந்த ஜாதி ஆகின்றனர். அவர்கள் தங்களுடைய படிப்பின் திறமையாலும் மதியூகத்தாலும் ஏனைய ஜாதியாரை எளிதில் வென்று அவர்களை அடிமையாகப் பாவித்து நடத்தி வந்தனர். சாஸ்திரங்களைப் பெரிதும் தமது நன்மைக்காகவே எழுதி வைத்துக் கொண்டனர்.

ஜாதி முறையின் கட்டுப்பாட்டால் ஒரு ஜாதியார் மற்ற ஜாதியாரோடு உண்பதும் கிடையாது. கலியாணம் செய்து கொள்வதும் கிடையாது. சில ஜாதியார் முன்னேற்றமடைய அவர்களின் உணவே முக்கிய காரணமாகும். ஆனால் கலியாண விஷயத்தில் சில விரோதங்களுண்டு. ஒரு பிராமணன் தன் ஜாதிப்பெண் ஒருத்தியையும் மற்றைய மூன்று ஜாதிப் பெண்கள் மூவரையும் முறையே வதுவைசெய்து கொள்ளச் சாஸ்திரம் உண்டு. அந்தணனுக்கு உள்ள சொத்தைப் பத்துப் பாகமாகப் பிரித்து அந்தண ஸ்திரீக்குப் பிறந்த மக்களுக்கு நான்கு பாகமும், க்ஷத்திரிய ஸ்திரீ மூலமாகப் பிறந்த குழந்தைக்கு மூன்று பாகமும், வைசிய ஸ்திரீ மூலமாகப் பிறந்த மைந்தர்களுக்கு இரண்டு பாகமும், சூத்திரப்பெண் மூலமாகப் பிறந்த புதல்வர்களுக்கு ஒரு பங்குமாகப் பங்கிடுவான். இவ்விதமாக உயர்ந்தஜாதி ஆண்கள் தாழ்ந்த ஜாதிப் பெண்களை மணக்க முறை கொண்டு தாயின் ஜாதியே பிள்ளைகளுமாவர். மேல் ஜாதி தகப்பனுக்குப் பிறந்தமையால் தங்களைச் சற்று மேலாகவே கருதுவார். இம்முறைக்கு மாறாக உயர்ந்தஜாதி ஸ்திரீகள் தாழ்ந்தஜாதி ஆடவர்களை மணந்து அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் கேவலமாகக் கருதப்பட்டுந் தனிஜாதி யாக்கப்பட்டனர். இவ்விதம் சில ஜாதியார் புதிதாக ஏற்பட்டனர். பின்பு நம் இந்தியாவானது ஆதிகாலத்தில் அதிகமாக அன்னியர்களால் அடிக்கடி ஆரவாரம்கொண்டு தாக்கப்பட்டது. அன்னியர்கள் ஏராளமாகக் குடியேறினர். அன்னிய ஜாதியார்கள் இந்தியர்களுடன் கலந்து இருந்ததின் பயனாக எண்ணிறந்த ஜாதிகள் ஏற்பட்டன. தற்காலத்தில் இப்பாத கண்டத்தில் சற்றேறக்குறைய 2378-முக்கிய ஜாதியார்களிருக்கின்றனர். இவர்களுள் பல உட்பிரிவும் உண்டு.

கி. மு. ஆறாவது நூற்றாண்டு தேசசரிதையில் ஜாதிமத பேதத்திற்காக முக்கியமாகக் கூறப்படும். அக்காலத்தில் உயர்ந்த ஜாதியார் என்று சொல்லப்படுபவர் தங்களுடைய கல்வியின் மேம்பாட்டால் மற்றைய ஜாதியாரை ஹிம்சித்தது கொஞ்சமல்ல. உலகத்தில் மனிதர் பல ஜென்மங்களெடுத்து இறுதியில் பெற முடியாத பிராமணப் பேற்றைப்பெற்று மோக்ஷம் அடைய முடியுமே ஒழிய மற்றவர்களால் முடியாது என்று கூறினர். இக்கொடிய வசனத்தை மாற்றச் சில மகாச்சாரியர்கள் தோன்றினர். அவர்களுள் புத்தரும் மகாவீரரும் முக்கியமானவர். ஆகவே சுருங்கச் சொல்லின் இந்து மதத்தின் கொள்கை என்னவெனின் ஜாதிபேதமே யொழிய வேறில்லை.

ஆதிகாலத்தில் இச்சாதி பேதத்தால் சில நன்மைகளும் இருந்தன. அவை ஒவ்வொரு ஜாதியாரும் தத்தம் தொழிலைச் செவ்வனே ஆற்றிவந்தமையும்,

---

சிரத்தையோடும் தருமத்தோடுமுள்ள தியானத்தால் பலமும் குணமும் பெறலாம்.

'பெரியோர்களுக்கு அடங்கி நடக்கும் தன்மையும், மரியாதையும், செட்டுத்தன்மையும், சுயநலம் கருதாமையுமாகும்.

ஆனால் இச்சாதிபேதத்தால் தாழ்த்தப்பட்ட ஜாதியாரை உயர்ந்த ஜாதியார் என்போர் கேவலமாக நடத்தினர். ஒரு ஜாதியாருக்கும் மற்றொரு ஜாதியாருக்கும் இயற்கையிலேயே ஒருவகையான கிளர்ச்சி உண்டாகி வேற்றுமை உண்டாகிறது. "The institution fosters intense class pride, fatal to a feeling of brother-hood between man and man" V. A. smith அதாவது எவ்வளவு அத்தியந்த நண்பர்களாக இருந்த காலத்தும் ஜாதி என்கிற இக் கொடிய கோடரி நட்பாகிய ஸ்தம்பத்தை இருபிளவாகப் பிளந்துவிடுகிறது. ஒரு ஜாதியாரில் ஒருவன் உயர்ந்த உத்தியோகத்திலிருந்தால் அவன் தன்னுடைய ஜாதியாரையே பெரிதாகப்பாராட்டி அவர்களுக்கே உத்தியோகமும் கொடுப்பான். என் செய்வது? மற்ற ஜாதியார் கற்றதனாலாகிய பயன் ஏனைய ஜாதியாருக்கு அறவே நீங்கிவிடுகின்றது. ஒரு ஜாதியார் முன்னுக்கு வருவாராயின் அவர்களை மற்றையோரைத் தலையெடுக்கா வண்ணம் செய்கின்றனர். சில ஜாதியாருக்குள்ள வேலைகளை அன்னிய ஜாதியார் கற்று மேம்படப் பிந்துகின்றனர். எனவே ஜாதிபேதத்தால் உண்டாகிய தீமைகளுக்கு அளவே இல்லை.

தற்காலத்தில் இந்தியாவானது ஜாதிபேதத்தால் மிகவும் கெட்டுப்போயிருக்கிறது. ஜாதி துவேஷத்தால் இந்தியா முன்வருவதற்கு வழியில்லை. இதற்கேறப தேச சரிதை ஆராய்ச்சியில் சிறந்த நிபுணர் ஒருவர், "India can never become a nation" என்று கூறியுள்ளார். சில ஜாதியார் வசிக்கும் தெருக்களில்கூட சிலர் செல்லலாகாது. கேவலம் பன்றிகளும்கூட உருண்டு செல்லும் அத் தெருக்களுக்குள் சமத்துவமுள்ள மானிட ஜென்மம் எடுத்தவர்கள் செல்லலாகாதென்றால் இம்மனிதர் பன்றிகளைக் காட்டிலும் கேவலமாகக் கருதப்படுகின்றார் என்பது அங்கை நெல்லிக்கனி. மனிதன் ஒவ்வொருவனும் கடவுளால் சமமாகச் சிருஷ்டிக்கப்பட்டானென்பது திண்ணம்.

"If we look through all the earth,
Men, we see, have equal birth,
Made in one great brotherhood
Equal in the sight of God."—*Henry Maine.*

தாழ்த்தப்பட்ட ஜாதியரைக் கடவுளின் சம சிருஷ்டி யென்று கருதாது துன்புறுத்துகின்ற மதியிலிகளைக் கடவுளும் வெறுப்பார் என்பதை மறந்தனர் போலும். என்னே! அவர்களது கொடுமை! தாழ்த்தப்பட்ட ஜாதியாரைக் கண்ணெடுத்தும் பார்க்கக்கூடாதாம்.

சிலர் 'ஜாதிவித்தியாசம் இருக்கக்கூடாது' என்று அதிகமாகப் பிரசங்கம் செய்து தம்மையே முன்னுக்குக் கொண்டுவரக் கருதுகின்றனர். இன்னும் சிலர் சமத்துவம் பாராட்டவேண்டுமென்று பிறருக்கு எடுத்துக் கூறி

---

குசவன் வனைந்த பாண்டங்கள் எல்லாம் உடைந்துபோவதுபோல பூமியில் ஜனித்தவை எல்லாம் மரணமடைகின்றன.

அதைத் தாம் கவனியாது வருகின்றனர். இவர்களது செய்கை "கையிலிருப்பது ஜெபமாலை கன்னம் வைப்பது பெருமாள் கோயில்" என்பதைப்போலிருக்கிறது.

நம் இந்தியா முன்னுக்குவர வேண்டுமென்றால் ஜாதித்துவேஷம் அறவே நீங்கப்பட வேண்டும். சகல ஜாதியாரும் சகோதரர்கள் என்ற நிலைமை ஏற்படவேண்டும்.

"Why let caste be so supreme ?
It is but folly's passing stream!"

பின்னும் "Empty is a cast dispute
All the castes have but one root" *Sri Henry Maine*.

ஆகவே ஜாதி வித்தியாச மிருக்கக்கூடாது என்பது நன்கு தோற்றுகிறது.

கிறிஸ்தவர்களை எடுத்துக் கொள்வோமானால் அவர்களுக்கு மதத்தைத் தவிர ஜாதி பேதம் கிடையாது. இந்தியாவிலுள்ள கிறிஸ்தவர்களோ இச்சாதிப் பாராட்டில் சற்று ஈடுபட்டுள்ளார். இவர்களும் ஜாதிபேதம் இல்லை என்று கூறுகிறார்கள். ஆனால் கொஞ்சம் வித்தியாசம் பாராட்டுகின்றார்கள். இறைவனைத் தொழுகின்ற காலத்தில் அவர்களுக்கு வித்தியாசம் கிடையாது.

முஸ்லிம்களைச் சற்று நோக்குவோமாயின் அவர்களின் ஒற்றுமை மெச்சத்தக்கதே. அவர்களுள்ளும் சற்றுப் பேதமிருந்தாலும "முஸ்லிம்" என்ற மாத்திரத்தில் ஒன்று சேர்ந்து விடுகின்றனர். இம்மதங்கள் பரவிவருவதற்கு இவர்களுள் அதிக வித்தியாசம் இன்மையும் இவர்களின் ஒற்றுமையும் காரணமாகும். புத்தமதம் பரவுவதற்கு ஜாதிபேதமின்மையே முதற்காரணமாகும்.

ஆனால் இந்துக்களை நோக்குமிடத்து இவர்களுள் ஜாதி பேதம் அதிகமாகிக் கடவுளையும் கண்டு தொழுவதற்குச் சிலர்க்கு முடியாது போகின்றது. சிலர் தெருக்களுள்ளும் செல்லமுடியாது தீண்டப்படாதவராகின்றார். அதே மனிதன் முகம்மதியனுவானாகில் அவனை வீட்டிற்குள் அழைத்துவைத்துக் கைகுலுக்கிப் பேசி அனுப்புகின்றனர் உயர்ந்த ஜாதி எனப்படுவோர். என்னே இந்து மதத்தின் ஜாதிபேதம்! இந்துமதம் ஓங்கி வளராமலிருப்பதற்கு இந்துக்களின் ஜாதிபேதமே காரணமாகும்.

ஆகவே இந்தியராகிய நாம் ஜாதிபேதம் என்கிற கொடிய விஷத்தைக் கடிந்து நீக்கி ஜாதிபேதமில்லாமல் சகோதரத்துவமாக இருந்து எச்சாதியாரும் எம்மதத்தினரும் கடவுளின் மக்களெனக் கருதி வித்தியாசமில்லாமல் சந்தோஷமாக வாழ்ந்து இந்தியாவின் கேவல நிலைமையை மாற்றிப் பிறநாடுகளினும் சிறந்த நாடாகச் செய்வோமாக. ஜாதி பேதம் இருக்கும்வரை இந்தியா முன்னுக்கு வராதென்பது திண்ணம்! திண்ணம்!! ஆகவே ஜாதிபேதத்தை நீக்கி யாவரும் சகோதரர்கள் போன்று ஒற்றுமையாக வாழ்வோமாக.

---

அநுபவத்தில் குணமென்று கண்டவற்றைக்கொண்டு அதன்படி நடத்தல்வேண்டும். பரிசீலனை செய்யாமல் ஒன்றையும் அங்கீகரித்தல் கூடாது.

லைப் அஷ்யூரென்ஸ் என்கிற

# ஜீவிய ஊர்ஜிதம்.

(இன்ஷியூரென்ஸ்.)

மழை இரக்கமின்றிப் பொழிகின்றது. காற்றும் மின்னலும் இடியும் சொல்லி முடியா. ஆகாயத்தைக் காணவும் கூடவில்லை. வீட்டைவிட்டு வெளியேயும் வரமுடியவில்லை. வாயிற் புறத்திலிருப்போர் பின்புறம் போகவும், பின்புற மிருப்போர் முன்புறம் வரவும் கூடவில்லை. வீதிகளெல்லாம் வெள்ளமயமா யிருக்கின்றன. பெரிய கட்டடங்களும் இடிந்து விழுகின்றன. தந்திக் கம்பங்களும், டெலிபோன் ஸ்தம்பங்களும் அறுந்து போகின்றன. பெரிய பெரிய விருக்ஷங்கள் வேரோடு பேர்க்கப் பட்டுத் தெரு வழிகளில் குறுக்கே விழுகின்றன. ஆறுகளும் ஏரிகளும் நிரம்பி ஊருக்குள் ஜலம்வர ஆரம்பிக்கின்றது. ஆகா! நேயர்களே, இப்படி ஊரெல்லாம் வருணபகவானின் லீலைக்குள்ளாகி இருக்கும்போது ஈரமற்ற இரண்டு மூன்று சதுர அடி நிலமும், அவ்வளவே அளவு கூரையும், ஒரு கம்பளியும் இருக்க எத்தனை ஆயிரம் மக்கள் ஆசைப்படுகிறார்கள்! சாதாரண நாட்களில் நாம் உலாவச் செல்லும்போது எத்தனை ஜனங்களை தெரு ஓரங்களிலும் வெட்ட வெளிகளிலும் சஞ்சாரஞ் செய்துகொண்டிருக்கக் காண்கிறோம். இவர்களுக்கு வீடுகள் கிடையா. வெய்யிலில் காய்கிறார்கள். மழையில் நனைகிறார்கள். மேற்கூறிய புயலின் வேகத்தில் இவ் வேழை ஜனங்கள் என்ன செய்வார்கள்? யார் வீட்டில் போய் இடம் கேட்பார்கள்? யாரைக் கேட்டால் யார் கொடுப்பார்கள்? எல்லோரும் தெருக் கதவைத் திறக்கவே அஞ்சும் போது இவ் வேழைகளைக் கவனிக்க எப்படிமுடியும்? ஆனுலொன்று: இவ் வேழைகளைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் கடவுளை நாம் போற்றக் காரண மேற்படுகிறது. இம்மட்டில் நம்முடைய புண்ணிய வசத்தால் கடவுள் நமக்குத் தங்க ஒரு நிழல் கொடுத்திருக்கிறாரே என்று அவரைக் கொண்டாடுகிறோம். மேலும் நம்மா லியன்றவரையில் நமது குடும்பத்திற்கு இந்த நிழலை நிரந்தரமாக விட்டு விட்டுப் போகவேண்டு மென்றும் தீர்மானிக்கிறோம்.

இதேமாதிரி வெய்யில் காயும்போதும், ஏழை ஜனங்கள் படும்பாட்டை என்னென்று கூறுவது. "பங்குனி மாதம் வெய்யிலில் பறையனும் நடக்க மாட்டான்" என்று ஒரு வசனம் உண்டு. 'பறையன்' என்னும் பதத்திற்கு வழக்கமாய் தண்டோரா போடுபவன் என்ற அர்த்த மிருக்கும். அதாவது சதா வெய்யிலில் திரிபவனுக்கும் கஷ்டமென்றால் ஏனையோர் கஷ்டத்தைச் சொல்லுவானேன்? காலுக்குச் செருப்பும் கிடையாது. தலைக்குத் தொப்பியு மில்லை, குடையு மில்லை. வட இந்தியாவில் காலில் செருப்பும் தலைக்குத் தொப்பியும் இல்லாம லிருப்பதைவிட தரித்திரத் தன்மை வேறெதுவு மில்லை. மேலும் நாகரிக முறைகளை அனுசரிக்கும் முனிசிபாலிடிகளும் ஜில்லா போர்டுகளும் தெருக்களில் டார் கொட்டி மெழுகி விடுகிறார்கள். மோட்

டார் வண்டிகளில் செல்பவருக்கு இது சுகமாக விருப்பினும் பாமர ஜனங்களுக்கு கோடை காலத்தில் எவ்வளவு கஷ்ட முண்டாகிறது. இதை நினைக்கும்போது, நம்மாலியன்றமட்டில் நம்முடைய குடும்பத்தாருக்கு நிழல் ஏற்படுத்த வேண்டுமென்ற தீர்மானம் உண்டாகிறது.

ஆங்கிலத்தில் ஒரு கவியுண்டு. ஓர் ஏழைச் சிறுவன் புத்தகக் கடைக்குச் சென்று ஒரு புத்தகத்தைப் பிரித்து வெகு ஆவலோடு படிக்கத் தொடங்கினன். புத்தகக் கடைக்காரன் வந்து, அடே, உனக்குப் புத்தகம் வாங்க யோக்கியதையில்லை, உனக்கும் படிப்பு வேண்டுமோ வென்று சொல்லிப் புத்தகத்தை எடுத்துப் போய்விட்டான். பையனுக்குத் துக்கம் அளவுகடந்து உண்டாயிற்று. ஐயோ, எனக்குப் படிக்கத் தெரியாம லிருந்திருக்கக் கூடாதா வென்று தன்னையே நொந்துகொண்டான்.

இன்னொரு பையன் சாப்பிட்டு இரண்டு தினங்க ளாயின. ஒரு ஹோட்டலருகில் சென்று அங்கு வைத்திருக்கும் தின்பண்டங்களை ஆவலோடு கவனித்தான். கவிதை யெழுதிய அம்மையார் கூறுகின்றார், இப் பையனும் எனக்குச் சாப்பிடக் கற்றுக் கொடுக்காம லிருந்திருக்கக் கூடாதா வென்று சொல்லிக் கொள்ளுதல் ஓர் ஆச்சரியமா வென்று. கணக்கில்லாத ஜனங்கள் எங்களுக்குச் சாப்பிடத் தெரியாம லிருக்கக் கூடாதா வென்றுதான் தம்மை நொந்து கொள்ளுகிறார்கள். தேஹி யென்று வெளியில் பிச்சை யெடுக்க வரும் ஜனங்கள் கொஞ்சம். வெளிக்குத் தெரியாமல் பட்டினியாய்க் கிடக்கும் மனிதர் எத்தனையோ பேர்கள். வயிற்றுக் கொடுமையால் எவ்வளவு கஷ்ட முண்டாகிறது. தடியனாக விருக்கிறாயே, போய் வேலை செய்யக் கூடாதா வென்று சொல்லுகிறோம். நூறில் பத்து மனிதராவது கட்டாயம் வேலைக்குப் பிரயத்தனப்பட்டுத்தான் இருப்பார்கள். வேலை கிடைக்காத துன்பந்தான் இப்படி அவர்களை வாட்டுவது. ஏழைகள் சோற்றுக்கில்லாமல் திண்டாடுவதையும் தற்காலத்தில் வேலைக்கு அவரவர்கள் படும் துன்பத்தையும் கவனிப்போர்கள் அவசியம் தம்முடைய குடும்பத்தாரைப் பாதுகாப்பில்லாமல் விடுவதில்லை யென்று சபதஞ் செய்வார்கள்.

பெரிய பட்டணங்களுக்குப் பிரபுக்கள் வந்தால் அவர்களை ஊர்வலஞ் செய்வித்து ஒரு மாளிகைக்கு அழைத்துச் செல்லுகிறார்கள். அவர்கள் பார்வைக்குப் பட்டணம் சிங்காரமாகவே விளங்குகிறது. பெரிய ரஸ்தாக்களென்ன, மின்சார விளக்குக ளென்ன, டெலிபோன் என்ன, ரேடியோ வென்ன, மாட மாளிகை கூட கோபுர மென்ன இவை யெல்லாம் பார்க்கப் பார்க்க மனத்திற்கு உற்சாகத்தைத் தருகிறது. இவ் விருபதாம் நூற்றாண்டில் வசிக்கக் கொடுத்து வைத்தோமே என்று கடவுளை வாழ்த்துகிறோமோ இல்லையோ-நம்மைப் பாராட்டிக்கொள்ளுகிறோம். ஆனால் அப்பிரபுவை சற்றே ஒரு சந்து வழியாக அழைத்துச் சென்றால் அவர் கண்களிலும் நம் கண்களிலும் படும் காட்சிகள் என்ன? எட்டடி அகலமுள்ள சந்து. ஜல தாரையே கிடையாது. வீட்டிலிருந்துவரும் கசுமலங்கள் எல்லாம் வீதியிலேயேகிடக்கின்றன. அவைகளைச் சுத்தம்செய்ய ஆள்கள் இல்லை. பெரியவீதிகளை நான்குமுறை சுத்தஞ்செய்ய வேண்டியிருக்கச் சந்துக்களை யாரால்கவனிக்க முடியும்? ஒவ்வொரு வீட்டிலும் அறைக்கு ஐந்துபேர் இருக்கிறார்கள். குளிக்கத் தண்ணீர் அதிகமாகக் கிடையாது. குடிக்கத் தண்ணீர் 4 அல்லது 5 வீடுகளுக்குப் பொதுவான குழாயி லிருந்து கொண்டுவர வேண்டும். அங்கு நீ முன்

நான் முன் என்ற சண்டைபோட வேண்டும், என்ன அசுத்தம், என்ன நாற்றம், என்ன ஈ எறும்புகள்? சில இடங்களில் இருக்கும் மனிதர் மனிதரா மிருகங்களா வென்று அப்படிச் சந்தேக முண்டாகி விடுகிறது. இவ்விடத்தில் மனிதர் எப்படி ஜீவித்திருக்கிறார்கள் என்று நமக்கு ஐய முண்டாகிறது. அந்தோ! ஏழ்மையின் கொடுமைதான் காரணம். அவ் விடங்களையும் அங்கு வசிக்கும் ஜனங்களின் கஷ்டங்களையும் பார்ப்பவர் தம்முடைய குடும்பத்தாரை அவ்வித கஷ்டங்களுக்கு ஒருகாலும் ஆளாக்கோமென்று உறுதி செய்து கொள்வார்கள்.

அன்பர்களே! புத்தர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கடைசியில் எவ்வாறு ராஜபோகத்தையெல்லாம் துறந்து காட்டிற்குச் சென்று ஆனந்த சாகரத்தில் மூழ்கி, ஜனங்களுக்கு முக்தி முறைகளை போதிக்கலானார்? உலகத்திலிருக்கும் துன்பங்களைக் கவனிததே. அவரைத் துன்பமென்பதே இன்னதென் றறியமுடியாத அமராவதிக்கு நிகரான அரண்மனையிலன்றோ வைத்துப் பாதுகாத்தனர். ஆயினும் அவருக்கு உலகத்தைப் பார்த்தவுடன் மனம் முறிந்துவிட்டது. அறிவுடையவரான நாமெல்லோரும் கேவலம் அபினியைத் தின்று உலகத்தை மறந்து, கஷ்டங்களையெல்லாம் மறந்து இந்திர லோகத்தில் இருப்பதாக நினைக்கும் மனிதனைப்போ லில்லாமல் விஷயங்களை ஆராய்ந்து அறியவேண்டும். இப்படிச் செய்தால் அப்படி முடியுமென்று தெரிந்துதான் காரியங்களைச் செய்யவேண்டும். எது எப்படிப் போனால் நமக் கென்னவென்று அசட்டை செய்வது நியாயமல்ல. நம்முடைய பொறுப்பை நாம் சரிவர முடிக்க வேணடும். இல்லையேல் வீண் அபவாதமாகவே முடியும். எதைச் செய்து முடிக்கவும் பணம் வேண்டும். பணமிருந்தால் மழை பெய்தாலும் சரி, சூரியன் காய்ந்தாலும் சரி, ரஸதாக்களில் டார் கொட்டியிருந்தாலும் சரி, வேலை கிடைக்காவிட்டாலும் சரி எப்படியாவது பனனீர் கொப்பளிப்பதற்குப் பதிலாக நீரைக் கொப்பளித்து, அறுசுவை யுண்டி யுண்பதற்குப் பதிலாக கூழைக் குடித்து, ஆடை யாபாரணாலங்கிருத பூஷணனாய் விளங்குவதற்குப் பதிலாக சாதாரண உடை யுடுத்து, மாளிகையில் வசிப்பதற்குப் பதிலாக குடிசையில் வசித்துக் காலத்தைக் கழித்துக் கௌரவமாய்ப் பிழைக்கலாம். ஒருவர் கையை எதிர்பார்க்க வேண்டாம். ஒருவர் அவதூறாய்ப் பேசுவதைக் கேட்கவேண்டாம்.

ஒவ்வொருவரும் தனவந்தராக முடியாது. ஆனால் எல்லாரும் அன்ன வஸ்திரத்திற்குக் குறைவில்லாம லிருக்கமுடியும். இதற்குப் போதுமான பணம் எப்போதும இருக்கவேண்டும். நாம உயிருடனிருப்பினும் இல்லா விட்டாலும் குடும்பத்திற்கு ரொக்கத் தொகையாகக் கொஞ்சமாவது இருக்க வேண்டும். இதற்குத் தக்கமுறை லைப் இன்ஷியூரென்ஸ்தான். பணம் சேர்க்க ஆரம்பித்தது முதலாகவே ஒரு நிதி ஏற்பட்டு விடுகிறது. சந்தா மாத்திரம் தவறாமல் கட்டிக்கொண் டிருக்கவேண்டும். எப்போது விபத்து நேர்ந்தாலும் மொத்தத் தொகையும் குடும்பத்திற்குத் தவறாது கிடைக்கும். குறித்த காலம் முடிய சந்தாதாரர் ஜீவித்திருந்தால் அவரே தொகையைப் பெறுவர். விபத்து நேர வேண்டுமென்று பிரார்த்தனை யில்லை. ஆனால் நாளைக்கு வருவது என்னவென்று தெரியாது. மனிதனின் ஆயுள் நீர்க்குமிழி. உயிருடனிருந்தால் எதையும் செய்யலாமென்று ஒரு நம்பிக்கையாவது உண்டு. கண்ணை மூடிக்கொண்டால் என்னமுடியும்? குடும்பத்தின் கதி

அதோ கதியாகக் கூடாதென்பதே நம்முடைய பிரார்த்தனை. அதற்கு வழி உறியி லிருக்கும்போதே அங்குமிங்கும் அலைவானேன்? நமது நாட்டில் எத்தனையோ இன்ஷியூரென்ஸ் கம்பெனிகள் இருக்கின்றன. ஏதேனும் ஒன்றுக்கு எழுதினால் விவர மடங்கிய புத்தக மனுப்புவார்கள். இதைக்கொண்டு இன்ஷியூர் செய்து குடும்பத்தைப் பாதுகாப்பது அத்தியாவசியம்.

[குறிப்பு :—இன்ஷியூரென்ஸைப்பற்றி விரிவாக அறிய விரும்புவோர் ஆனந்தபோதினி வாரப்பதிப்பில் வெளியாகும் கட்டுரைகளைப் படிக்கலாம். இன்ஷியூரென்ஸ் சம்பந்தமாக ஏதேனும் சந்தேகம் கேட்க விரும்புவோர் ஒரு அணா தபால் தலையுடன் ஆசிரியருக்குத் தெரிவித்தால் தக்க நிபுணர்களைக் கொண்டு பதில் அளிக்கப்படும்.]

## செக்கு வாங்கல்



வாணியன்:—என்ன ஸ்வாமிகளே! மாதம் ஆறு ஆகப்போகிறது. எண்ணெய் பாக்கி ரூ. 25 ஆகிறது. இன்றைக்குக் கொடுத்தால் எனக்கு அதிக உதவியாயிருக்கும்.

ஐயர்:—"சரி! ஆனால் அந்தத் தொகைக்கு ஒரு "செக்கு"த் தருகிறேன் வாங்கிக்கொள்."

வாணியன்:—"ஐயோ சாமீ! அந்தப் பேச்சுமாத்திரம் எடுக்காதீர்கள். அது வேண்டவே வேண்டாம். நானும் ஏழு செக்குகளைக் கட்டி அழுது கொண்டிருக்கிறேன். ஒரு செக்கையாவது விற்றுவிடலாம் என்று ஒரு வருஷமாய் அலைகிறேன். முடியவில்லை."

# மேனாட்டுத் தத்துவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

37-ம் பக்கத் தொடர்ச்சி.)

டேகார்டு என்பவர் பிரபஞ்சத்தை இரண்டாக வகுத்து இரண்டையும் சேர்க்க கடவுள் இருக்கிறாரென்றார். மனம் அல்லது சித் ஒருபுறம்; ஜடமாகிய உலக மொருபுறம். இரண்டுக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. ஆனால் மனம் உலகத்தை யறிய வேண்டியிருக்கிறது. இதற்குத் தான் கடவுளின் உதவி தேவை.

டேகார்டுகெகுப் பின் வந்த அவருடைய சிஷ்யர்கள் மனம் உலகத்தை அறிய முடியாதென்று தீர்மானித்தார்கள். கடவுள் எப்போது மூன்றாவதாக நிற்கிறாரோ எப்போது மற்ற இரண்டு பொருள்களுக்கும் சம்பந்தம் உண்டாக அவருடைய தயவு வேண்டுமோ—அற்ப விஷயங்களிலும் அவருடைய முயற்சி யன்னியில் எதுவும் நடைபெறாது. நாம் கையைத் தூக்கவேண்டு மென்றாலும் கடவுளின் இஷ்டத்தால்தான் நடைபெற வேண்டும். அவருடைய சக்தியால்தான் உலகத்தில் எதுவும் நடக்கின்றது. ஆனால் இச் சக்தி வெளியிலிருந்து பிரயோகிக்கப்படுகிறதே யொழிய உலகத்தையோ மனத்தையோ அல்லது இரண்டையுமோ ஊடுருவிச் செல்லுந்தன்மையதாகவில்லை. இப்படியிருந்தால் அதாவது உலகம், மனம், கடவுள் ஆகிய மூன்றும் சம்பந்த மற்றவையாக விருந்தால் உண்மை ஒற்றுமை இருக்க முடியாது. இம் மூன்றுக்கும் ஒற்றுமையிருந்தால் தான் பிரபஞ்சம் சமசீராக நடைபெறுகிறதற்கு ஏதுவாகிறது. ஆகையால் இம் மூன்றும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவை. இந்தச் சம்பந்தத்தைக் கண்டுபிடிப்பதே டேகார்டுக்கு அடுத்த முக்கிய தத்துவ ஞானியாகிய ஸ்பினோஜா (Spinoza) என்பவருடைய கருத்து. பிரபஞ்சம் ஒன்று. அதன் பொருள்கள் ஒன்றோடு ஒன்று இணைக்கப்பட்டிருக்கின்றன. கடவுள் ஜடத்திற்கும் மனத்திற்கும் வெளியில் இருப்பவரல்ல. கடவுள்தான் பிரபஞ்சம். அவர் ஒருவரே உண்மைப் பொருள். மற்ற விஷயங்கள் அவர் முன்னிலையில் அசத்துக்களே. நாம் காணும் வஸ்துக்கள் அநித்திய முள்ளவை. நமக்கு உலகத்தில் காணும் பொருள்களும் மனிதர்களும் பலவாகத் தோன்றுகின்றன. ஆனால் யோசிக்குமளவில் இது தவறென்று புலப்படுகிறது. ஒவ்வொரு பொருளும் "நான் ஒரு பாகம். தனிப்பொருள் அல்ல," என்று சொல்லுகிறது. உதாரணமாக ஒரு சாளரத்தை எடுத்துக் கொள்வோம். சாளரம் தனிப்பொருளா? இல்லை. சாளரம் சுவரில் ஒரு பாகம். சுவர் தனிப்பொருளா ? இல்லை. சுவர் வீட்டின் ஒரு பாகம். வீடு தனிப்பொருளா ?

---

அம்புகளை அகற்றிவிட்டால், மனதுக்குச் சமாதான முண்டாகும். துக்கத்தை ஜயித்தவனுக்கு சுகம் உண்டாகும்.

இல்லை. பட்டணத்தில் ஒரு அணு. பட்டணமோ? தேசத்தில் ஒரு அணு. தேசமோ? உலகத்தில் ஒரு பாகம். உலகமோ? பிரபஞ்சத்தில் ஓர் அம்சம். இப்படியாக எந்த வஸ்துவை எடுத்துக் கொண்டாலும், அது தனியாக நிற்க முடியாமல் நான் இப் பிரபஞ்சத்தில் ஒரு பாகம் என்று சொல்லாநிற்கிறது. மேலும் தனிப்பொருள் ஒன்றுதான் மனதிற்கு உண்மையான—தேய்வுபடாத ஆனந்தத்தைத் தரவல்லது. ஆனந்தம் தரவல்லது பணமல்ல, கீர்த்தியல்ல சிற்றின்பமல்ல. தத்துவ ஆராய்ச்சியின் பயன் இவ்வானந்தத்தைக் கண்டு பிடிப்பதுதான். இவ்வானந்தம் இவ்வநித்திய உலக மல்லவென்று கண்டோம். கடவுள் ஒருவர்தான் இவ்வானந்தம். அவரை அறிதலே ஆனந்தம். இக் கடவுளுக்கும் நமது உலகத்திற்கும் என்ன சம்பந்தம்?

ஸ்பீநோஜா மூன்று பதங்களை உபயோகிக்கிறார். அவை பொருள் (substance) குணம் (Attribute), மாதிரி (mode) என்பன. பொருள் என்பது தனியாக நிற்கக்கூடிய உண்மைப் பொருள். இப்பொருள் கடவுள்தான். வேறு எந்தப் பொருளும் உண்மைப் பொருளல்ல. டேகார்டு ஜடமும் மனமும் கடவுளன்னியில் சம்பந்தப்பட முடியாதென்று ரல்லவா? ஆகையால், ஜடமும் மனமும் பொருளல்ல, குணங்கள். இவை கடவுளின் குணங்கள். உலகத்தில் காணப்படும் பொருள்களோ? இவை கடவுளின் ' மாதிரிகள்'' அதாவது கடவுள் தன்னுடைய எல்லையற்ற ஸ்வரூபத்தை இவ்வாறெல்லாம் விவரிக்கின்றார். டேகார்டு மனத்திற்கும் ஜடத்திற்கும் சம்பந்தத்தை யேற்படுத்துவது கடவுள் என்றார். ஆனால் மனமும் ஜடமும் கடவுளின் குணங்களாய் விட்டபடியால் இரண்டுக்கும் சம்பந்தம் எப்போதும் இருந்துகொண்டிருக்கிறது. ஒரு சார்பாகச் சித்தென்று தோன்றுவது இன்னொரு சார்பாக ஜடமாகத் தோன்றும். ஆகவே மனத்திற்கும் ஜடத்திற்கும் சேர்க்கை யில்லாவிட்டாலும் நேர்நேராக, இரு தண்டவாளங்களில் செல்பவை போலச் சம்பந்தமுண்டு.

கடவுளின் ஸ்வரூபம் யாது? அவருக்கு மனிதனைப்போல் தலையும், கைகளும், தேகமும், கால்களும் உண்டா? இல்லை. அவ்வாறு நாம் கடவுளை நினைப்பது தவறு. மனிதன் கடவுளைப்பற்றி நினைப்பதால் தன் உருவத்துடனிருப்பதாக நினைக்கிறான். புலி சிங்கம் முதலிய விலங்கினங்கள் அவரைப்பற்றி நினைக்கக் கூடுமேயானால் அவரைப் புலியாகவும் சிங்கமாகவும் முறையே கருதுவனவென்பதில் சந்தேகமில்லை. கடவுள் சர்வ வல்லமையுள்ளவர். அவருக்குக் குறைவுபாடுகள் இருந்தால் அவர் நம்மைவிட எப்படி மேம்பட்டவர் ஆவர்? பொது ஜனங்கள் எல்லாக் காரியங்களுக்கும் கடவுளையே ஆதிகாரணமாகச் சொல்கிறார். நாம் உண்பதற்கும் உடுப்பதற்கும், பேசுவதற்கும், தூங்குவதற்கும், நற்காரியஞ் செய்வதற்கும், துர்க்கிருத்தியஞ் செய்வதற்கும் கடவுளே காரணமென்றால் நாமென்ன விளையாட்டுச் சாமான்களா? ஆதி காரணமென்று ஒன்றில்லை. சில ஜனங்கள் கடவுளின் மேல் பக்தியென்று சொல்லிக்கொண்டு, உலகத்தில் உள்ள விஷயங்கள் யாவும் தம்முடைய நன்மைக்காகவே உண்டாயினவென்றும் கடவுள் மற்றவரைவிடத் தம்மை அதிகமாக ஆதரிப்பார் என்றும் நம்பியிருப்பார்கள். கடவுள் நமக்கு

---

நன்மை செய்யவே இவ்வளவும் செய்யின் ஏன் உலகில் பிணிகளும், பூகம்பங்களும், புயற்காற்றுகளு மிருக்கின்றனவெனின் இம் மனிதர்கள் மற்ற மனிதர் கடவுளைப் போற்றாததனால்தான் இவை உண்டாகின்றன வென்கிறார்கள். இது தவறு. சுகமும் துக்கமும் நல்லவர் கெட்டவர் என்று பக்ஷபாதமில்லாமல் இரு திறத்தாருக்கும் உண்டாகின்றன. ஆகையால் அற்ப விஷயங்களிலெல்லாம் கடவுள் பெயரை எடுப்பது பிசகாகும்.

இவ்வாறு சொன்னால் நன்மை தீமை, சுகம் துக்கம் என்பவைகளுக்கு என்ன காரணம்? ஸ்பினோட்ஜா இவைகளுக்கு மனமே காரண மென்றார். ஸங்கீதத்தை யெடுத்துக் கொள்வோம். சந்தோஷமாக இருப்பவனுக்கு இது ப்ரீதியைத் தருகிறது. துக்கித்துக் கொண்டிருப்பவனுக்கு துன்பம் விளைவிக்கிறது. செவிடனுக்குச் சுகம்துக்கம் இரண்டும் இதனால் உண்டாவதில்லை. நாமே சில விஷயங்களைச் சுகமாகவும் சிலவற்றைத் துக்கமாகவும் கருதுகிறோம். ஒரு பரீக்ஷைக்கு இரு பிள்ளைகள் செல்கிறார்கள். இருவரும் இரண்டாம் வகுப்பிலேயே தேருகிறார்கள். ஒருவன் சந்தோஷப்படுகிறான். இன்னொருவன் துக்கப்படுகிறான். இதற்கென்ன காரணம்? முதலவன் மூன்றாவது வகுப்பில் தேறினாலும் போதுமென்று நினைத்திருந்தான். ஆகையால் இரண்டாம் வகுப்பில் தேரியது அவனுக்கு ஆனந்தத்தை யுண்டாக்குகிறது. இன்னொருவன் முதல் வகுப்பில் தேரவேண்டுமென்று ஊக்கமாய்ப் படித்தும் இரண்டாம் வகுப்பில் தேரியதற்கு வருந்துகிறான். இவைகளுக்கு மனமே காரணம். பொது விஷயங்களிலெல்லாம் இவ்வாறே அபிப்பிராய பேதங்களுண்டு. கடவுளுக்கு விருப்பும் வெறுப்பும் இருக்குமாவென்பது சிலருடைய கேள்வி. அவை இராவென்றே சொல்லவேண்டும். இருந்தாலும் நாம் விருப்பு, வெறுப்பு என்று சொல்பவையும் அவருடைய விருப்பும் வெறுப்பும் ஒரே மாதிரியாக இரா. கடவுளுக்கு நம்மைப்போல் மனம், புத்தி முதலியன கிடையா. அவர் நிர்க்குணர். எந்தக் குணத்தைச் சொன்னாலும் அவரைக் குறைவுபாடுள்ளவ ராக்குவோம். பிரபஞ்சத்தை நாம் வருணிக்க முடியாது. பிரபஞ்சம் சட்டக்கோட்பாட்டை அனுசரிக்கும் ஒரு யந்திரமாகச் சொல்லலா மென்பது ஸ்பினோட்ஜாவின் அபிப்பிராயம். தனி அங்கங்களுக்குச் சத்துவம் கிடையாது. அப்படியானால் கடவுளுக்கும் நமது உலகத்தினருக்கும் யாது சம்பந்தம்? இவ்விஷயத்தில் ஸ்பினோட்ஜாவின் கருத்துச் சரியாக விளங்கவில்லை. தனி அங்கங்களுக்குச் சத்துவம் கிடையாதெனினும் நாம் பார்க்கும் வஸ்துக்கள் உண்மையென்றே நமக்குத் தோன்றுகிறது. ஆகவே கடவுள் இந்தத் தனி வஸ்துக்கள் அடங்கிய பெரிய வஸ்துவென்று சொல்லலாமா? முடியாது. வஸ்துக்கள் ஒன்றோடொன்று நித்திய சம்பந்தம் பெற்றிருக்க வேண்டுமே யொழியத் தனித்தனி நிற்க முடியாது. மேலும் தனிப்பொருள் கடவுள் ஒன்றுதான் என்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு சார்பாக பிரபஞ்சம் சட்டக்கோட்பாட்டிற் கடங்கிய யந்திரம் என்று ஸ்பினோட்ஜா அபிப்பிராயப்பட்டாலும் மற்றொரு சார்பாக பிரபஞ்சத்திற்கே கடவுளன்னியில் சத்துவம் கிடையாது என்று நினைத்தார். கடவுளை நிர்க்குணராகக் கருதியபின்பு அந்நிர்குணக் கடவுளினின்றும் எப்படிச் சகுணப் பிரபஞ்சம் உண்டாயிற்று என்று அவருக்கு விவரிக்க முடியவில்லை. அதாவது

---

விருதாவாகத் துக்கப்படுபவர்களைச் சமாதானப்படுத்தவேண்டும். சங்கடம், துக்கம் எனப்பட்ட அம்புகளை அகற்றவேண்டும்.

கடவுளுக்கும் உலகத்திற்கும் யாது சம்பந்தமென்று சொல்லக்கூடவில்லை. ஆனால் தத்துவ ஆராய்ச்சியின் முக்கிய கருத்து, இவ்வனித்திய சகுண உலகம் எப்படி நித்திய நிர்க்குணக் கடவுளிலிருந்து உண்டாகிறது, எப்படி மனிதன் அநேக குறைவுபாடுகள் உள்ளவனாயிருந்தும் அக்கடவுளின் ஸ்வரூபத்தையறிந்து நித்தியானந்தத்தைப் பெறுகிறான் என்பனவே. இஃதெவ்வாறு சாத்தியமாகும்? ஸ்பினோஸா இதற்கு நாம் நம்முடைய இச்சைகளைத் தள்ளிவிடவேண்டுமென்றும் உண்மை விஷயங்களையே கற்கவேண்டுமென்றும் சொல்லுகிறார். நமக்குப் பல்வேறு விஷயங்களில் பிரியமுண்டாகிறது. உலகத்திற்கு மாறாக நம்முடைய சுய இச்சையை மாத்திரம் கருதி அநேக விஷயங்களைச் செய்ய விரும்புகிறோம். இது தவறு. நமது மனத்தின்கண் அநேக தப்பபிப்பிராயங்கள் உண்டாகின்றன. அவை நம்முடைய அறியாமையினாலேயே உண்டாகின்றன. உண்மை விளக்கை ஏற்றி இவ்விருட்டை நீக்கவேண்டும். உண்மை விளக்கு என்பது கடவுளைப்பற்றிய ஞானம். இஞ்ஞானத்தை வளரச் செய்வனவே நலமானவை. இடர் உண்டாக்குபவை தீயவை. எக்காரியமும் ஞானத்தினாலேயே செய்யப்படவேண்டும். அபிமானத்தாலோ, இரக்கத்தாலோ, வருத்தத்தாலோ செய்தல் கூடாது. ஒரு நோயாளிக்குச் சகாயஞ் செய்வது இரக்கத்தினாலன்று. அவன் நோயைப் போக்கினால் அவன் சுகமடைவான் என்னும் ஞானத்தால். ஞானத்தை யடைந்தவன் கீதையில் சொல்லியிருப்பது போல் பிராமணன், சண்டாளன், பசு, நாய் எல்லாவற்றையும் சமமாய்ப் பாவிப்பவன். ஏன் சர்வம் கடவுளிலேயே இருக்கிறது. (தொடரும்.)

———:(o):———

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ்வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப்பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர்கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ப-ர்.

---

நூறு வயதிற்குமேல் உயிரோடிருந்தாலும் பிறகு உறவினர்களை விட்டுப் பிரியவேண்டியே வரும்.

# சன்மார்க்க போதங்கள்



(தெல்லிப்பிழை, கா. சின்னப்பா.)



அன்பைப் பெருக்கின் துன்பம் தொலையும்
ஆன்ம வளர்ச்சியை மூன்முறைப் படிசெய்
இரவும் பகலும் அரன்பத மதைநினை
ஈசன் திருவருள் ஆசையை நீக்கும்
உற்ற துணையெனக் கற்றவர் தமைமதி
ஊனை வளர்த்திட மானங் கெடாதே
எம்பெரு மானை நம்புதல் நன்று
ஏழைகட் குதவி எப்பொழுதும் செய்
ஐயம் மனதை நையச் செய்யும்
ஒருபொருள் தன்னிலும் மருள்கொள் ளாதே
ஓயா தீசனை வாயால் வாழ்த்து
ஔவை சொற்படி செவ்வையாய் நீநட
கற்றவர் மதிப்பைப் பெற்றிட விரும்பு
காசினிற் சற்றும் ஆசை வையாதே
கிழவரை எதற்கும் அழவை யாதே
கீழிருப் போரை என்றும் நீபார்
குடிவெறி யென்றும் கெடுதி விளைக்கும்
கூச்சமில் மாதர் பேச்சை நம்பாதே
கெட்ட பழக்கம் நட்டம் நல்கும்
கேட்டில் நிற்போரை நாட்டவர் வெறுப்பர்
கைப்பொருள் விட்டும் மெய்ப்பொருள் தேடு
கொச்சைப் பேச்சில் இச்சை வையாதே
கோபம் மீறிற் பாவம் சேரும்
சரியெனத் தேர்வதைப் புரிவாய் நீநிதம்
சாதுக் களைநீ சோதிக் காதே
சிற்றறி வென்றும் பற்றினைப் பெருக்கும்
சீவ இரக்கம் பாவ மகற்றும்
சுகம்பல மிரண்டும் இகமதில் நாடு
சூழ்ச்சி முறைகளில் ஆட்சி பெறாதே
செய்ததை மறப்பவர் உய்வதை யெண்ணா

---

மனித வாழ்வின் புனிதபாகம் மறந்துபோன அருள் நிறைந்த சிறு செயல்களாகும்.

சேர்ந்து நிற்பவர்க் கார்துணை நீபுரி
சையென ஒருவரை நையவை யாதே
சொப்பன மாமென் றிப்பிறப் பதைநினை
சோதனைக் காளாய் வாதனைப் படாதே
தர்மம் வளரக் கர்மம் குறையும்
தாமென மாதரை யனுதினம் நீ நினை
திருந்தா திருப்பவர் வருந்துவ ரென்றும்
தீயபெண் மயக்கில் மாய்வதை நீயொழி
துன்பம் புரிபவர்க் கின்பமிங் கில்லை
தூர உறவினர் நேரத்திற் குதவார்
தெய்வத் துணையே மெய்யென நீ நினை
தேச நலமதில் ஆசைவை நீ நிதம்
தையலர் அழகில் மையல்கொள் ளாதே
தொன்மை வழக்கம் நன்மை பயக்கும்
தோழமை எந்த நாளும் நீ பேணு
நற்குண நற்செயல் பொற்புறச் செய்யும்
நாட்டிற் பஞ்சம் கேட்டினை விளைக்கும்
நிறத்தில் மயங்கி அறத்தை விடாதே
நீசச் செயலில் பாசம் வையாதே
நுண்ணிய அறிவாற் கண்ணியந் தேடு
நூல்பல கற்றவர் மேல்நிலை யடைவர்
நெறிபிச காதவர் அறிவினைப் போற்று
நேர்வழி நிற்பவர் சீருற வாழ்வர்
நைபவ ரென்றும் செய்தவ மழிப்பர்
நொய்ய வுரைப்பவர் வையப் படுவர்
நோயை விலக்கித் தூயவ னுயிரு
பயமற் றவர்க்கே ஜெயம்வரும் நாளும்
பாச மனைத்தும் மோசம் விளைக்கும்
பிறர்பொரு ளாசை அறம்பல அழிக்கும்
பீடு பெறுவதை நாடுவர் மேலோர்
புண்ணியஞ் செய்பவர் நண்ணுவர் நற்கதி
பூவையர் தமக்குச் சேவைசெய் யென்றும்
பெரியோ ருறவு அரியதென் றெண்ணு
பேதமை நிறைந்த மாதரை மறந்துய்
பையொடு வருபவர்க் கையமிடு நிதம்

---

காரியம் பெரிதோ சிறிதோ தம்மால் செய்யக்கூடியதில் சலிப்பின்றி உழைத்தலே சான்றோர் குணம்.

பொய்பே சுபவர் உய்வ தசாத்தியம்
போதனை போலச் சாதனை பண்ணு
மற்றவர் பொருளிற் பற்றுவை யாதே
மாதரைத் தாயெனிற் றீதணுகாது
மிகைபடப்பேசிற் நகைமை குறையும்
மீறும்காம வீறெமைக் கெடுக்கும்
முத்த மிடுவதைப் புத்தியாய் நீசெய்
மூர்க்கர் முகத்தைப் பார்க்கவும் படாது
மெச்சத் தக்கதை அச்சமிலாது செய்
மேலைத் தேச நூல்களை வாசி
மையலிற் சிக்கி மெய்கெடுக் காதே
மொழிவ தொன்றிலும் நீ இழிவடையாதே
மோகமதனிற் றூகம் வையாதே
வருந்திஉழைப்பது பிரிந்து போகாது
வாசனைமனதின் தேசைப் பெருக்கும்
விருப்பு வெறுப்பைப் பெருக்கி வாழாதே
வீடடைந் தவரை நாடு துதிக்கும்
உத்தம சாத்திரம் நித்தம் நீபடி
ஊக்க மற்றவர்க் காக்கம் மிகக்கெடும்
வெற்றி பெறுபவர் குற்றம் வெறுப்பர்
வேதனை கொடுக்கும் பாதையை விலக்கு
வையகம் தன்னை மெய்யென எண்ணேல்
ஒத்துழைப் பவர்கள் சித்தி எய்துவர்
ஓரம் பேசுதல் வீரமா காது
வாழுக வையமெந் நாளும் செழித்தே.

# தங்களுடையது எது?


















































S. BRAHMA.

1. "பிராட்வே கிராப்":—வண்டி போக்கு வரவுக்கு வெகு நல்ல வழி.

2. "கொக்கி கிராப்":—மூட்டை முடிச்சுகளிருந்தால் அதில் மாட்டி விட்டுக் கைவீசிக்கொண்டு நடக்கலாம்.

---

தரணி வாழ்வின் தங்கச்சட்டம்—முக்கிய மல்லாதவைகளில் சுதந்தரம். முக்கியமானவைகளில் ஒற்றுமை. அனைத்திலும் அன்பு.

3. " பிடாரிமயிர் கிராப்" :—கிண்டி ரேஸில் குதிரைகள் அஞ்சும்—முதல் பிரைஸ் இவருக்கே.

4. "தலையணை கிராப்"—எவ்வளவு பாரமானாலும் தாங்கலாம்.

5. "பப்பளிமாஸ் கிராப்"—மழை வெய்யிலுக்கு நல்லது. தொப்பி தேவை இல்லை.

6. "காலரி கிராப்":—ஈ, எறும்பு, கொசு வகையராக்கள் ஆனந்தமாய் உட்கார்ந்து ஜனங்களை வேடிக்கை பார்க்கும்.

7. "ரெவரண்ட் கிராப்":—இவருக்குக் கோபம் பிறந்தால் மயிர் நிமிரும். கோப சந்தர்ப்பத்தை எல்லாரும் தெரிந்துகொள்ளலாம்.

8. "மலை கிராப்":—திருப்பதி யாத்திரை தேவை இல்லை.

9. "கொம்பு கிராப்":—தெருவில் போனால் மாடுகள் அஞ்சும்.

10. "நாயர் கிராப்":—பெட்ரோல் இல்லாமல் மோட்டார் நடத்தலாம்-குடுமியில் கட்டி.

11. "துருமி கிராப்":—தேங்காய் திருகலாம்.

12. "பிரமணை கிராப்":—சட்டி பானைகள் வைக்கலாம்.

13. "வைதிக கிராப்":—குடுமியைப் பிடித்து ஜபம் செய்யலாம்.

14. "கரடி கிராப்":—உஷார் ஜாஸ்தி.

15. "சிக்னல் கிராப்":—வண்டிப்பயம் இல்லை.

16. "பாக்கெட் கிராப்":—பென்சில்-பேனாக்களை மறைத்துக்கொள்ளலாம்.

17. "இந்திர தனுசு கிராப்":—வெய்யிலில் நிறம் மாறும்.

18. "ஆட்டுக்கிடாய்க் கிராப்":—ஓநாய் அஞ்சும்.

19. "ஆப்பிள் கிராப்":—இவர் பேச்சு இனிப்பாயிருக்கும்.

20. "கால்வாய் கிராப்":—படகில் பிரயாணம் செய்யலாம்.

21. "கைபர் கிராப்":—கைபர் இந்தியாவுக்கு வந்த வழி.

22. "டர்பன் கிராப்":—தலைப்பாகையின்றிக் கோர்ட்டுக்குப் போகலாம்.

23. "அமெரிக்கன் கிராப்":—நாடகத்தில் ஸ்திரீ பார்ட்டுக்கு மிகவும் அநுகூலம்.

24. "பனங்காய் கிராப்":—மூளை அதிகம்.



---

*மலரின் பல இதழ்கள் அரும்பில் ஒருங்கிருக்கும். விரிந்தவுடன் பிரிந்து விடும். அதுவே அதன் அழகு. அதுபோல் உலகிலுள்ள பல ஜாதியாரும் அன்பால் ஒன்றுறப் பிணிப்புண்டிருப்பினும் தங்கள் விசேஷ குணங்களை வேறு வேறாக விருத்தி செய்யும் பொழுதுதான் மனிதவர்க்க மலர் பூரணம் பெறுகின்றது.*

# மாதர் உலகம்





## பெண்மைத் தன்மை



(அசலாம்பிகை யம்மையார்.)



பெண்மக்கட்குச் சிறந்த பெண்மைத்தன்மை இயற்கையா செயற்கையா? என்பதை வினவுவார் இரார். ஒவ்வொரு பிறப்பிலும் இயற்கையான தனிப்பட்ட சில குணங்கள் அமைந்திருத்தல் கடவுள் நியதி. அவ்வாறே பெண்மக்களும் ஆண்மக்களினின்றும் வேறுபட்ட தன்மைகள் பல அமைந்து விளங்குகின்றனர். ஆண் இனமும் பெண் இனமும் ஒரே உடல் இயற்கை குண இயற்கை வாய்ந்தவர்களாக இருப்பரேல் மக்கள் இனமே மறைந்திருக்கும். உலக வளர்ச்சிக்கும், இன்பப்பெருக்கிற்கும் இடம் வாய்க்கவே இயற்கைத் தெய்வம் பிரபஞ்ச உற்பத்தியில் வேறுபாடுகளை அமைத்துள்ள தென்பது விளக்கம். இவ் வேறுபாடுகள் மக்கள் இனத்திற்கு மட்டில் ஏற்பட்டிருக்கவில்லை. விலங்கு, பறவை, ஊர்வன, தவழ்வன முதலிய எல்லா உயிர்ப்பிராணிகளிடமும் இயல்பாயிருத்தலைக் காண்கின்றோம்.

### வேற்றுமையில் ஒற்றுமை

இந்நிலையில் ஒற்றுமையின் தோற்றம் எழுகின்றது. மாறுபட்ட இயற்கைகளிலிருந்தே ஒற்றுமை முளைதோன்றுவதென்பது சொல்லுங்கால் வியப்பாகப் பட்டாலும் உன்னுங்கால் உண்மையென விளங்கும். ஒருயிர்பால் இல்லாத ஓர்குணம் மற்றோர் உயிர்பால் அமைந்திருப்பதனாலேயே ஓரினத்தினைப் பிறிதோர் இனம் அவாவிநிற்க வேண்டுவது அவசியமாகின்றது. உதாரணமாக வெம்மை, தண்மை—வன்மை, மென்மை—வீரம், சாந்தம்—தீவிரம், மந்தம்—வெகுளி, பொறை—இத்தகைய மாறுபட்ட பல இயற்கைகள் ஒன்றிற்கொன்று இன்றியமையாத சாதனங்களேயாகும். இச்சாதனங்களைப் பயன்படுத்திக் கொள்ளவே பரஸ்பரம் நட்பை நாடுதல் இயல்பாகின்றது. இவைகள் யாவும் ஒன்றுக்கொன்று சமமான அவசியம் உடையவைகளே யன்றிக் குறைவானவைகளன்று.

---

அவனியிலுள்ள சமயங்களில் அறத்தாறு உய்ப்பதொன்றே உண்மைச் சமயம்.

ஆகவே ஆடவனுக்குப் பெண்ணுதவி எத்துணை அவசியமோ அவ்வளவு பெண்ணுக்கும் ஆண்மகனது உதவி அவசியமாகும்.

### ஏற்றமும் தாழ்வும்

இந்நிலையில் ஆடவர்க்கு ஏற்றமும் பெண்டிர்க்குத் தாழ்வும் எவ்வாறு நிலவுதல் கூடும்? மனிதவியல்பினது உண்மையை யுணர முடியாத பேதைகளே ஏற்றமும் இறக்கமும் இருப்பதாக அறியாமையால் எண்ணுவர். வீட்டில் ஆடவனை அன்புடன் போஷித்துக் காப்பவள் பெண். வெளியில் ஓர்வித இன்னலும் நேராது பெண்ணைக் கண்களை இமைகள் காப்பதுபோல் காப்பவன் கணவன். மெய்வருத்தம் பாராது, சோம்பலுறாது, சலிப்புறாது கணவனையும் முதியர், விருந்தினர் மக்களாதியரை ஆதரிப்பதில் ஆர்வம் உடையவள் உத்தமமங்கை. தான் மிகக்கடின முயற்சிகளில் ஈடுபட்டாயினும் மனைவியாதி குடும்பத்தினரைச் சுகவாழ்வில் திளைக்கச் செய்வதில் ஊக்கம் உடையவன் சிறந்த புருடன். இருபாலாரும் தத்தம் கடமைகளை ஆற்றிவருவதில் தவறாதிருப்பரேல், ஏற்றம் என்பதும் தாழ்வென்பதும் எண்ணவும் இடமிராது. அவ்வாறின்றி மனமாறுதல் ஏற்படினும், தங்கள் கடமையே உயர்ந்ததெனும் முனைப்பு எழுமாயினும், இரண்டிடத்திலும் உள்ள சமநிலை மறையத் தலைப்படுகின்றது. பெண்கள் எத்துணை மனோதிடம் உடையவர்களாயினும், தம்மினும் தேகதிடத்தில் மேம்பட்ட இயல்பினையுடைய ஆடவனின் துணைவலியைத் தற்காப்பு நியமங்கருதி நாடாமல் புறக்கணித்தல் பெரும்பிழையாகும்.

ஆடவன் எத்துணை ஆண்மையுடையவனாயினும், தனது நன்மை தீமைகளில் சமத்துவ பாகத்திற்குரிமை பூண்ட வாழ்க்கைத் துணைவியின் அமைதியான கருத்தைக் கலக்காது வினையாற்றுதல் இறுதியில் ஏமாற்றத்தினையே பயக்கும். உதாரணமாகச் சிட்டுக்குருவிகளின் இல்வாழ்க்கையினைக் கவனிப்போமாயின் உண்மை புலனாகும். நாம் வசிக்கும் வீடுகளின் முகப்புத் தாழ்வாரங்களில் கூடுகட்டி வாழும் ஷை குருவிகளிடையே காணப்படும் இக்குருவிகளின் கற்பின் உறுதியைப் பலர் கவனியாமல் இருக்கலாம். கற்பென்பதும், உண்மைக்காதலென்பதும், கடமையென்பதும் அவ்வினத்திலிருந்தே மக்கள் பயிலுதல் தகும் என்பது கவனிப்பவர்கட்கு மிகைபடாது. பெண்குருவி கருத்தரித்து முட்டையிடும் பருவம் வருமளவும் ஒன்றையொன்று பிரியாமலே இரைதேடச் செல்லும். இப்பெண் குருவி வேறு ஆண் குருவியுடன் சேர்ந்து செல்வதோ, ஆண் குருவி வேறு பெண் குருவியுடன் கூடிச் செல்வதோ கிடையாது. பெண்குருவி முட்டையிடின் ஆண்குருவி வெளிச்சென்று தானியம் தேடித் தன் பெண் குருவியை நாடிவந்து இரையை அதற்கூட்டுவதும், முட்டையிடு முன்பு அம்முட்டை கீழே விழுந்து சேதமுறாமலிருக்கப் பதனமாக மெதுவான தானியத்தாள்கள் நார்கள் இவைகளைச் சேகரித்து வெய்யில் பனி புகாதபடி கூடுகட்டுவதும், இட்ட முட்டைகளிலிருந்து

---

வெப்பம் தட்பம் இரண்டில் எது மிகுதியாய் விளையினும் ஏற்றுக் கொள்ளக் கூடியவனே பலவானிலும் பலவான். அதுபோல் உயர்வு வந்தபொழுது கர்வமின்றியும் தாழ்வு வந்தபொழுது தளர்ச்சியின்றியும் உள்ளவனே உத்தமரில் உத்தமனாவான்.

குஞ்சுகள் வெளிவந்து பறந்து இரைதேடச் செல்லும் ஆற்றல் பெறும் அள வும் இத்தாய்க்குருவி உடனிருந்து பயிற்சியளிக்கும் கடமையும், பின்னர் அவைகள் சுயேச்சை பெற்றுப் பிரிந்தபின்னும், இத்தாய்ப்பறவையும் தந்தைக் குருவியும் பிரியாது நின்று முன்போல் வசிப்பதும் எல்லாம் வல்ல இறைவன் கருணைக்கோர் காட்டாகத் திகழ்கின்றதென்று கூறலாம். சிட்டுக்குருவி என்று சொல்லப்படும் இவ்வினத்தில் ஆண் இன்றிப் பெண்ணையோ பெண் ணின்றி ஆணையோ கண்டதில்லை. அவைகளின் இறுதி யெப்படி என்பது மட்டில் சாதாரண அநுபவத்தில் விளங்கவில்லை. நிற்க இதனை நோக்கு மிடத்தும் வீட்டுவளர்ப்பு மிருகங்கள் பிறவற்றினிடத்தும்கூடப் பெண்மை யின் தன்மையும், ஆண்மையின் தன்மையும், சிறிது மாறுபட்ட குணம் குறிக ளுடன் அமைந்து நிலவுவதைக் காண்கின்றோம்.

### அடக்குதலும் அடங்குதலும்

இங்ஙனமாக அகாரணமாக ஒரு சில ஆடவர் பெண்களைத் தாழ்ந்தவர்க ளாக மதித்து அவர்களுடைய சிறந்த உரிமைகளை மறந்து தங்களுக்குக் கீழ்ப் படிந்து கொடுமையாக நடத்தினும் சகித்து அடங்கி நடக்கவேண்டுமென்று எதிர்பார்க்கும் நீதியற்ற வழக்கம் நம்நாட்டில் எவ்விதமோ ஏற்பட்டுவிட்ட தென்பதுண்மை. ஆனால் அதற்கு மாறாக ஆண்மகனை இஷ்டம்போல் நடக்கச்செய்ய வேண்டுமென்னும் அவாவுடைய பெண்களும் சமூகத்தில் இல்லையென்று கூற முடியாது. இரண்டும் இடைக்காலத்தில் அறிவை வளர்க் கும் நாட்டுமொழியையும் கலை நூல்களையும் போதிய அளவு பயிலா தொழிந்த குற்றத்தினாலே ஏற்பட்ட குறைகள் என்பது தேற்றம். அறநூல் பயிற்சி மறைந்த இடத்தில் அந்நியநாட்டு மொழிப்பயிற்சி கால் கொள்ளத் தலைப்பட் டது. சிறிது ஆறுதல் பயப்பதாக ஆரம்பத்தில் காட்சி அளித்தது. எனினும் உண்மையில் அது அவ்விதமில்லை. நாளடைவில் அந்நியமொழியின் பயிற்சி அந்நியநடை உடை நாகரிகத்தில் ஆர்வத்தை எழுப்பி நாட்டுவழக்க ஒழுக்கங் களில் சிறிதளவு இருந்த அடையாளத்தினையும் அழித்து நாட்டுப்பற்றினையும் முக்கியமாக ஒழுக்கத்தினையும் புறக்கணிக்கச் செய்து விட்டது. இதன் பய னாகப் பெண்கள் ஆடவரைப்போல் வெளியேறிப் பட்டம் பதவி பெறவும், பொருள்தேடும் உத்தியோக முயற்சியில் ஈடுபடவும் தலைப்பட்டனர். இதனால் ஒரு சிறு நன்மையும் விளைந்தது. அதாவது பெண்களைக் கணவர்கள் அடக்க எண்ணிய நிலைமை மறைந்ததேயாகும். கணவனைச் சேர்ந்த பந்துக்களால் இடைக்காலத்தில் இழைக்கப்பட்ட கொடுமைகளும் ஒழிந்தன. அதற்கு மாறாக மருமகளாகவரும் பெண்களினால் பெரியோர்களின் பழைய ஆதிக்கம் அழிந்து, அவர்கள் நோக்கத்திற் கடங்கி நடக்கவும் அவர்கட்கு ஊழியம் புரிய வும் நேர்ந்தது. இது கால தேவதையின் அநுக்கிரகமே யாகும்.

உண்மையில் எவ்வளவு மூர்க்கமான கணவனாயினும் அநீதியாக மனை வியை அடக்குபவனாயினும், பல வகைகளில் தன்னை யறியாமலே தானும் மனைவிக்கு (இல்லற முறையில்) அடங்கி நடக்காமல் முடிவதில்லை. இந்த இரகசியம் ஆடவர் ஒரு சமயம் உணர முடியாமல் இருந்தாலும், பெண்

---

உண்மை ஞானம் கண்முன் இருப்பதைக் காண்பதன்று, பின் வருவதை முன் அறிவதாகும்.

னுலகிற்கு விளக்கம்தான். உபந்நியாஸ மேடைகளில் தாராளமாக முன்னேற்றமெனப் பலரோ சிலரோ நினைக்கும் முக்கிய மாறுதல்களை வற்புறுத்தும் அறிஞர்களும் தத்தம் சொந்தத்தில் அவ்வாறு செய்ய மாட்டாமல் நிற்கும் உதாரணம் ஒன்றே பெண்களுக்கு ஆண்கள் முக்கிய விஷயங்களில், அடங்காமல் மீற முடியவில்லை என்பதற்குத் தக்க சான்றாகும். சுருக்கமாகச் சொல்லுமிடத்து சூத்திரக்கயிறு இல்லத் தலைவியிடத்தேயுள்ளது. அவ்வித இல்லுறை அரசியை நல்லறிவுடையவராக இளமையில் பயிற்ற வேண்டிய கடமை பெற்றோருடையதே. இளமையில் சரியான வழியில் பயிற்றப்படாத சிறுவர் சிறுமிகளால் பிற்காலத்து விளையும் இன்னல்கள் கணக்கிட முடியா. நல்லாற்றில் பகட்டின்றி அடக்கமான முறையில் வளர்க்கப்படும் பெண்கள் பெருகும் காலமே நாடு விடுதலை பெறுங் காலம்.

### பெண்களின் இயற்கைப் பெருமிதம்

இயல்பாக ஆடவரிற் புலவர் சிலர் தமது மனதை அடக்க ஆற்றல் அற்றவராகிச் பெண்களே அதற்குக் காரணர்களெனக் கவிகளிலும் கற்பித் தெழுத துணிந்தனர். என்னே இவர்கள் துணிவு, என்னே இவர்கள் அறிவு! சித்தத்தை யடக்கி யாளும் சீலர்களை துன்மார்க்க விருப்பமுள்ள பெண்களின் தீவிர முயற்சிகள் என் செய்யும்? சுகப்பிரமத்தினை அரம்பையர் கோலம் அசைத்ததோ? நமது நிகழ்காலத் தலைவராகிய மகாத்மாகாந்தி யடிகளின் மனதைச் சலிப்பிக்க உரிய மாதரசியினால்தான் முடியுமோ? ஆனால் ஒரு சிறு மாசு மில்லாத ஒரு பெண்ணின் நிறை ஒரு விலங்குணர்வுடைய மூர்க்க ஆடவனால் அழிக்கவும் படலாம். இத்தகைய இனத்திற் பிறந்த ஒரு சில கவி வாணர்களே பெண்கள் தமதுள்ளத்தைக் கெடுத்ததாக வருணிக்கின்றனர்.. இதனினும் கொடுமை வேறுளதோ? இத்தகைய ஆட்சி நம்நாட்டில் இருந்தும் இவர்கள் காலத்தில் நம்நாட்டில் இருந்த கவியரசிகள் பலரில் ஒருவராவது ஆடவரால் தங்கள் மனம் சிதைந்ததென்று வெளியிட்டதில்லை. இதை எண்ண எண்ண இதயம் பூரிக்கின்றது. இதனால்தான் தெய்வப்புலவர் பெண்ணிற் பெருந்தக்க யாவுள? என்றருளிச் செய்தனர் போலும்.

### அடிமை எண்ணம்

இதற்கு ஒரு சிலர் அவ்வாறு பெண்கள் குறை கூறுததற்குக் காரணம் ஆடவர்மீது எப்போதும் பெண்கள் குறைகூறக் கூடாதென்று தொன்று தொட்டு ஏற்பட்ட ஒருதலைச் சார்பான அநீதச்சட்டம் என வாதிக்கின்றனர். அது உண்மையில் ஏற்கத்தக்க தல்ல. ஆதிகாலத்திலும் நீதிமன்றங்களில்கூட அறிவுடைய பாஞ்சாலி, காந்தாரியம்மன், குந்திதேவி முதலினோர் ஆடவர் குற்றங்களை எடுத்துரைத்துக் கண்டித்திருக்கும் சரித ஸாரங்கள் வியாஸ பாரதத்தில் காணலாம். தம்மனதிற்கு ஒவ்வாத முறையில் ஆடவன் குற்றம் புரியின் பொறுக்க முடியாமல் புறங்கூறுவதில் பெண்களே முற்பட்டவர்கள் என்பது உலக அநுபவம். ஆனால் தங்களிடம் பாதிக்குற்றம் இருக்கையில் அதை மறைத்து ஆண்மகனே குற்றவாளியென எந்தக் கவிவாணிகளும் நிந்திக்க விரும்பவில்லை என்பதொன்றே பெண்ணின் பெருந்தன்மைக்கு ஏற்ற சான்

---

உலக அரங்கில் இவ்வாறாகத்தான் நடிப்பேம் என்று கூற இயலாது. கொடுத்த வேலையைத் திறம்படச் செய்து முடிப்பதே நமது கடன்.

ரூகும் என்பதே ஈண்டு குறிப்பிட்ட விஷயம். இதற்கேற்ப பத்தினி தாசித் தெருவிலும் குடியிருக்கலாம் என்று பெண்களிடையே ஒரு பழமொழி யும் வழக்கில் நிலவி வருகிறது. இவைகளை ஊன்றி நோக்குமிடத்து அடக்க உணர்ச்சியும் சகிப்புத் தன்மையும் ஒழுக்கப்பற்றும் பெண் இனத்திற்கு (ஆட வரைவிட) அதிகமாயிருத்தல் இயல் பென்பது கண்கூடாகும். சில ஆடவர் அடிமைகளாகத் தம்மை எண்ணுவதினுல் பெண்டிரும் (கற்றவர்களாயினும்) தம்மைத்தாமே அடிமைகளாக எண்ணிக்கொள்ளத் தலைப்பட்டனர் என்பது பின்னும் பெண்ணுலகை இழிவாக்குவதாகவே படுகின்றது. பெண்ணின் இயற்கையறிவு ஆண்மகன் அறிவிலும் நுட்பமானதே. ஆதலின் அத்தகைப் பேதமையை இவர்கள் மீதேற்றுவது பாவம். மக்களையன்றி பறவை விலங் கினங்களை நாம் நோக்குவோமாயினும் அவைகளிலும் ஆண் இனங்களை விடப் பெண்ணினங்கள் இயற்கையிலேயே அமைதி யுள்ளவைகளாகக் காண் கின்றோம். அவைகளை அடங்கி நடக்கும்படி போதித்தவர் எவருமில்லை. இது போலவே மக்கள் இனத்திலும் ஒரு சில ஆடவர் தம்மை யடிமைகளாக எண்ணுவது கண்டு தாமே தங்களை அவ்வாறு எண்ணினர் என்பது பொருந் துவ தன்றும்.

## பெண்கள் மீட்சி

ஆகவே பெண்களும் ஆண்களும் தற்ககலம் எண்ணுவதுபோல் அநித் தியமான உடலின்பம் துய்த்தற்காகவே மணம் புணர்தல் என்று கருதாமல் அறத்தை யோம்பவும் எளியவர்க்குதவவும் நன்மக்களை ஈன்று நாட்டைச் சிறப் பிக்கவும் வேண்டுமென எண்ணிப் பண்டைக்கால விவாக மந்திரங்களின் கருத்துகளுக்கியைய ஒருவர்க் கொருவர் இன்றியமையாத ஒரு மனப்பட்ட துணைவர்களாய் ஒழுகுதல் வேண்டுமெனும் கொள்கை நம்நாட்டில் வேரூன்ற வேண்டும். அந்நாளே பெண்கள் நிலை உயருங்காலம். யௌவனத்தின் நாட கத்தை நன்கறிந்து விழிப்புற்றவர்களான பெற்றோர்கள் குலநாடி குணநாடி முற்பட்டு முடிக்கும் மணவினையை ஆட்சியில் மேற்கொண்ட இந்திய நாக ரிகம் சிதைவுறாதிருக்கப் பாரததேவி அருள் செய்தல் வேண்டும். ஸ்திரீ சுதந் தரம் என்னும் பெயரால் தற்கால நாகரிகர்கள் போடும் திட்டங்களை விவரிக்க இறகெழவில்லை. உண்மையில் இவைகள் சுதந்தரமாகா. ஸ்திரீகளிடம் (இந்தி யாவில்) ஒழுக்கப்பற்றும் கற்பின் திடமும் பெரும்பாலும் அழியா திருந்ததினு லேயே ஆங்கில அரசாட்சி ஏற்பட்டு இரண்டு நூற்றாண்டுகளாகியும் நமது பாரதத்தாய் உருக்குலையாமல் இன்றும் கிராமங்களிலாவது அசைவற நிற்கின் றாள். இந்நிலை என்றும் இடம்பெறுவ தாகுக. சுபம். சுபம்.



பெரிய மனிதர்:—"உங்கள் வீட்டு இராக்காவல்காரன் தூங்கிவிடுகிறான் என்பதை நீங்களே ஒப்புக்கொள்ளுகிறீர்கள். அப்பேர்ப்பட்டவனை நான் வேலையில் வைத்திருக்கிற வழக்கமே இல்லை."

மற்றவர்:—இருக்கலாம். ஆனல் என் வேலைக்காரன் விழித்துக்கொண் டிருக்கும் பொழுதைவிடத் தூங்கும்பொழுது அதிகச் சத்தம் செய்கிறான்.

---

நீதியாய் வாழ்பவனே நீடு வாழ்பவன். தீயவழியில் செலவு செய்த காலம் தாழ்ந்ததன்று—இறந்ததே யாகும்.

# புலவர்களைப் பற்றிய பொய்ம்மைகள்.

(T. S. குழந்தைவேலன், திருவானைக்கா.)

ஆதியில் மனிதன் உண்ண உணவின்றியும் உடுக்க உடையின்றியும், இருக்க இடமின்றியும் காடுகளில் அலைந்து திரிந்தான். கொட்டை பழங்களைக் கொண்ட மட்டுந் தின்றான். விலங்குகளை வேட்டையாடி அவற்றின் மாமிசத்தைத் தின்று வெகு நாளைக் கடத்தினான். நீண்ட காலம் நிர்வாண நிலையிலிருந்த மனிதன் விலங்குகளின் தோலை யணிய ஆரம்பித்தான். விலங்குகளைக் கொல்லும் வேடர் நிலையிலிருந்து ஆடுமாடுகளைப் பழக்கி இடையர் நிலையை யடைந்தான். பிறகு தன் மனக் கருத்தை வெளியிட பாஷையை யுண்டாக்கினான். இவ்வாறே நாளுக்குநாள் மனிதன் உயர்ந்து, தற்காலம் ஆயிரக் கணக்கான மைல்களுக் கப்பாலுள்ளாரிடம் நேரில் பேசுவதுபோல் பேசவும், ஆகாயத்தில் பறந்து செல்லவும், இன்னும் பல வித இயலாக் காரியங்களை யெல்லாம் இயற்றவும் வல்லவனாய்த் திகழ்கிறான்.

மக்கள், அறிவிலும், வழக்க வொழுக்கங்களிலும், நாகரிகப் போக்கிலும் நாளுக்கு நாள் முன்னேறி வந்திருக்கிறார்க ளென்பது மேற் கூறியவற்றால் இனிது விளங்கும். இதற்குத் தேச சரித்திரங்களே போதிய சான்று. இன்றுள்ள இந்நிலையில் பழைய காலச் செய்திகளில் பல அறிவுக்குப் பொருந்தாதனவாகவும், அதிசயத்தை விளைவிப்பனவாகவும் இருப்பது இயல்பே. அவை தோன்றிய காலத்தின் தன்மை யெனக் கொண்டு அவற்றின் சிக்கல்களை அறுத்துச் சீர்படுத்திக்கொள்வது அறிஞர் செய்கை. இன்றைய செய்திகள் இன்னும் இருநூறாண்டுகட்குப் பின்னர் எவ்வாறு கருதப்படுமோ, கொள்ளப்படுமோ எவரே கூறவல்லர்? இது கொண்டே சென்ற ஆனி மாத சஞ்சிகையில் கம்பர்—ஔவையார் இடையிற் பேசப்படும் சில பொருந்தாச் செய்திகளை அறிவிற் பொருத்தி அலசிப் பார்த்து எனக்குத் தோன்றிய சில கருத்துக்களை எழுதி வெளியிட்டேன். இப்பொழுது ஒட்டக் கூத்தர்-புகழேந்தி இவர்களைப் பற்றிய ஒட்டாச் செய்திகளை உரைக்கின்றேன்.

ஒட்டக்கூத்தரும்–புகழேந்தியும்:—உறையூரிலிருந்து அரசு செலுத்திய இராஜேந்திர சோழன் காலத்திலும், அவன் மகன் குலோத்துங்க சோழன் காலத்திலும் ஒட்டக் கூத்தப் புலவர் அரண்மனை வித்துவானாயிருந்தார். அதே காலத்தில் பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரையில் செங்கோல் செலுத்திய வரகுண பாண்டியன் அவையில் புகழேந்திப் புலவர் வித்துவானாயிருந்தார்.

வரகுண பாண்டியன் மகள் குலோத்துங்க சோழனுக்கு மணஞ்செய்விக்கப்பட்டாள். பாண்டியன் மகளை அனுப்பும் பொழுது புகழேந்திப் புல

---

பிறர்க்கு நன்மை செய்பவன் தனக்கும் நன்மை தேடிக்கொள்ளுகின்றான்.

வரையும் சீதனமாக அவளுடன் சோழ நாட்டுக்கு அனுப்பிவைத்தான். புகழேந்திப் புலவர் சோழனிடத்திலிருக்கும்பொழுது ஒட்டக்கூத்தர் சோழனைப் புகழ்ந்து ஒரு பாட்டுப் பாடினுர். அது கேட்ட புகழேந்தி பாண்டியனைப் புகழ்ந்து ஒரு செய்யுள்பாடி கூத்தர் பாடலைக் கண்டித்தார். அது முதல் கூத்தருக்குப் புகழேந்திபால் அழுக்காறெழுந்தது.

ஒருநாள் சோழராஜன் அவ்விருவரையும் அழைத்துக்கொண்டு தெருவில் உலாவப் போனுன். அப்பொழுது ஔவையார் இரண்டு காலையும் நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். சோழனைக் கண்டவுடன் அவர் ஒரு காலை முடக்கினுர். பிறகு புகழேந்திப் புலவரைக் கண்டு மற்ெறாரு காலையும் முடக்கினுர். ஒட்டக் கூத்தரைக் கண்டு இரண்டு காலையும் நீட்டிக்கொண்டார். அதைக் கண்ணுற்ற ஒட்டக்கூத்தர் மனந்திடுக்கிட்டு "ஓ! அம்மையே! நீவிர் இவ்வாறு செய்த காரணம் யாது?" என, அதற்கு அந்தம்மையார், "கூத்தா! சோழன் முடியரசனுகலின் ஒரு காலையும், புகழேந்தியார் கல்விமானுகையால் மற்ெறாரு காலையும் முடக்கினேன். நீயோ முழு மூடனுதலால் இரண்டு காலையும் நீட்டினேன். நீயு ‹ இந்தப் புகழேந்தியைப்போல் வல்லமையுள்ளவனுனல் சோழனையும், சோழ நாட்டையும் விஷயமாகக் கொண்டு சந்திரன் மூம்முறைவர ஒரு பாடல் சொல்லுவாய்" என, ஒட்டக்கூத்தர் அதற்குச் சம்மதித்து,

"வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக் கமுகின் மீதேறி
துள்ளி முகிலைக் கிழித்துமழைத் துளியோ டிறங்குஞ் சோனுடா!
கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா!
பிள்ளை மதியா லென்மாது பேதை மதியு மிழந்தனளே."

என்று பாடினுர். அது கேட்டு ஔவையார் நகைத்து "ஒட்டா! ஒருமதி கெட்டாய்!" என்று இழிவாய்ப் பேசி "புகழேந்தியாரே நீர் பாடும்!" என்ருர். அவர் உடனே,

"பங்கப் பழனத் துழுமுழவர் பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங்கிளநீர் தனைவிட் டெறியுந் தமிழ்நாடா!
கொங்கர் கமரா பதியளித்த கோவே யமரர் குலதீபா!
வெங்கட் பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்த பிறைக்கும் விழி
[வேலே."

என்று பாடினுர். அதைக் கேட்டு ஔவையார் வியந்தனர். ஒட்டக்கூத்தர் புகழேந்தியிடம் முன்னிலும் அதிகமாகப் பகைமை கொண்டார். இதே காரணத்தால் கூத்தர், சோழன் தன்னிடம் வைத்துள்ள செல்வாக்கைக் கொண்டு ஏதோ காரணங் காட்டிப் புகழேந்தியைச் சிறைப்படுத்தினுர்.

ஒருநாளிரவில் குலோத்துங்க சோழன், ஆண்டுக் கொருமுறை அனைவருடனும் யானைமீதேறி, குடைபிடித்துக் கொண்டு ஊர்வலம் வரும் வழக்கத்தின்படி வீதியில் உலாவவந்தான். அதைச் சிறைச்சாலையிலிருந்த புகழேந்திப் புலவர் சாளரத்தின் வழியாகப் பார்த்துக்கொண்டிருந்தார். அப்பொழுது அப்பவனியைக் கண்ட பலரும் "அற்பர் அர்த்தராத்திரியிற் குடைபிடிப்பர்" என்ற பழமொழியைச் சொல்லி, அரசனையும் ஒட்டக்கூத்தரையும் தத்தமக்

---

தனக்கென உழையாதான் துன்புறுவான். பிறர்க்கென உழைப்பதெல்லாம் பிறரும் தன் இன்பத்தில் கலந்து கொள்வதற்காகவே.

குன் இழிவாகப் பேசினர். இது சோழன் செவியிற்பட, ஒட்டக்கூத்தரை நோக்கி, "இரவிற் குடை நிழலிற் செல்லல் தேவருக்கன்றி நமக்குத் தகுமா" என, அதற்குக் கூத்தர் விடை பகரவியலாது விழித்தார்! அப்பொழுது அருகில் எட்டிப் பார்த்துக்கொண்டிருந்த புகழேந்திப் புலவர் அரசனை நோக்கி,

"அண்டர்மீ துலவிவாழும் அருந்ததிக் கற்பாளுன்னைக்
கண்டதா லுவகை யெய்திக் கற்பழிந்திடுவ ளென்றே
எண்டிசை புரக்கும் வேந்தே இரவினில் கவிகை நீழல்
கொண்டுமா நடாத்துமாறு குலோத்துங்கா நீதிதானே."

என்ற செய்யுளைச் சொல்லினர். அதுகேட்ட சோழன் மகிழ்ந்து புலவரைச் சிறையினின்றும் விடுவித்து யானையின் மீது ஒட்டக்கூத்தப் புலவரோடு சேர்த்து வைத்துக்கொண்டு அரண்மனைக்குச் சென்றனன்.

நிகழ்ந்தவற்றைக் கேட்ட அரசன் மனைவியாகிய பாண்டியன் மகள், தன் ஆசிரியராகிய புகழேந்தியைச் சிறையிலடைத்திருந்ததற்கு மிக வருந்தி, நாயகனது நீதிவழுவால் இப்பிழை நேர்ந்ததென் றெண்ணிச் சினங்கொண்டு தன் அரண்மனை வாயிற் கதவைச் சார்த்தித் தாழிட்டுக்கொண்டிருந்தாள். அரசன் புகழேந்தியை அநீதியாய்ச் சிறையிலடைத்திருந்தமை கருதி மனம் நொந்து அவ்விரு புலவரையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு தன்மனைவியின் அந்தப்புர வாயிலுக்குச் சென்றான். அங்கு கதவு சாத்தியிருப்பது கண்டு தன் மனைவியின் சினம் நீங்க ஒரு பாட்டுப் பாடுங்களென்று ஒட்டக்கூத்தரை விளிக்க, அவர்,

"இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்துவள்ளைக்
குழையொன் றிரண்டு விழியணங் கேகொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகை மானு பரணனின் வாயில்வந்தாற்
பிழையொன் றிரண்டு பொறுப்பதன் றோகடன் பேதையர்க்கே."

என்ற செய்யுளைச் சொல்லலும், பாண்டியன் மகள் பின்னுஞ் சினந்தவளாய் "ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத்தாழ்" என்று கூறிப் படக்கென இரண்டாவது தாழுமிட்டனள். அதுகண்ட அரசன் புகழேந்தியைப் பாடும்படி சொன்னான். அவர்,

"நானே யினியுன்னை வேண்டுவதில்லை நளினமலர்த்
தேனே கபாடந் திறந்திடு வாய்திற வாவிடிலோ
வானே றனைய இரவி குலாதிபன் வாயில்வந்தால்
தானே திறக்குநின் கைத்தலமாகிய தாமரையே."

என்ற செய்யுளைப் பாடினர். உடனே பாண்டியன் மகள் கோபந் தணிந்து கதவைத் திறந்தாள்.

பின்னர், புகழேந்திப் புலவர், ஒட்டக்கூத்தர் தம்மிடம் பகைமை கொண்டு பற்பல துன்பம் விளைவித்து வருகிறார் என்பதனால் அவரைக் கொன்றுவிட வேண்டுமென எண்ணினர். ஆதலால் அவர் ஒரு பெருங் கல்லை எடுத்துக்கொண்டு ஒட்டக்கூத்தர் வீட்டுக்குச் சென்று அவர் தலையில் கல்லைப் போட்டுக்கொல்லுவதற்காக ஓரிடத்தில் ஒளிந்துகொண்டிருந்தார். அப்பொழுது ஒட்டக்கூத்தர் ஏதோ மன வருத்தத்தால் சாப்பிடாமல் கூட சயனித்திருந்தார். அவர் மனைவி உண்ணும்படி உபசரித்தாள். அவள் எவ்வளவு வேண்டியும் பயனில்லாதது கண்டு "பாலாவது கொண்டுவரட்டுமா?" என்று

பரிவுடன் வினவினள். ஒட்டக்கூத்தர் வேண்டாமென்றார். அவர் மனைவி பின்னும் விடாது "பாலில் சர்க்கரையாவது போட்டுக் காய்ச்சிக் கொண்டு வரவா?" என்று இன்னுங் கனிவாகக் கேட்டாள். ஒட்டக்கூத்தர் மிகச் சலிப்புடன் "சருக்கரை கலந்துகொண்டுவந்தாலும் வேண்டாம்; புகழேந்தி வெண்பாவின் சுவையைப் பிழிந்துகொண்டு வந்தாலும் வேண்டாம்" என்றார். இதை மறைவிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த புகழேந்திப் புலவர் ஓடோடியும் வந்து ஒட்டக்கூத்தரைக் கட்டிக்கொண்டு, தாம் செய்யவிருந்த கொடுஞ்செயலைக்கூறி, அன்று முதல் இருவரும் தோழமைகொண்டு வாழ்ந்தனர். இது வரலாறு. இச்செய்திகள் கர்ணபரம்பரைக் கதைகள் என்று எழுதிய ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். இன்னும் இதில் பற்பல மாறுபாடுகளும் பாட பேதங்களு முண்டு. இனி இவற்றை ஆராய்வோம்.

இவ்வரலாற்றின் ஆரம்பத்தில் புலவரிருவருக்கும் பகைமையையுண்டாக்கி, முடிவில் அவ்விருவரும் தோழமை கொண்டார்களெனக் கூறியுள்ளது அறிந்து சிந்திக்கத்தக்கது. இது சாலவும் வியக்கத்தக்கதே! கம்பர்-ஒளவையார் கதையிலும் இங்ஙனமே முதலில் சண்டையும் முடிவில் சமாதானமும் கொண்டுள்ள தென்பது ஈண்டு நினைவுக்கு வரும். பகைமை கொண்டு நின்ற புலவரிருவர் பின்னர் மனமொத்த நேயராயினரென்னுங் கதை கேட்போருக்கு மிகவும் இன்பம் விளைவிக்கும். எனினும் இடையில் பெய்துள்ள சில செய்திகள் உணர்ச்சியுள்ள எவர் உள்ளத்தையும் வருத்தாதிரா.

இன்னொன்று—எந்த உண்மைச் செய்தியும் ஒருவகையான வரலாற்றைக் கொண்டே விளங்கும். இந்த உண்மைச் செய்தியிலேயே கால வியற்கையில் சிறிது திரிந்து புது உருவம் பெறுவதுமுண்டு. ஆயினும் அடியோடு மாறி விடாது. அந்த வகையில் இப்புலவர்கள் வரலாறு எத்தனையோ விதத்தில் மாறுபட்டுத் திகழ்கின்றன. இவற்றுள் உண்மையெனக் கொள்வது எதையென்பதற்கு அவற்றை ஆக்கிய ஆசிரியர்களே வரவேண்டும்.

புகழேந்தி—ஒட்டக்கூத்தருக்கு ஆதியில் பகையுண்டானது மேற்கூறிய ஒருவகையிருக்க, அல்லாத மற்றொரு அழகிய வகையும் அறியத்தக்கது. ஒட்டக்கூத்தப் புலவர் சோழனைப் புகழவேண்டி,

"வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்று முதுகுக் கிடான்கவசம்—துன்றும்."

எனக் கூறிச் சற்று ஆலோசித்தனர். இதற்குள் புகழேந்திப் புலவர்,—

"வெறியார் தொடைகமழு மீனவர்கோன் கைவேல்
எறியான் புறங்கொடுக்கி னென்று."

எனக் கூறினர். இது எத்துணைச் சுவைகலங் கொண்டிலங்குகிறது! இவ்விருவகையில் எதனைக் கொள்வதோ, எதனைத் தள்ளுவதோ அறிஞர் ஆராய்க.

சோழன் புலவர்களுடன் தெருவில் உலாவச் சென்றான்! இது எங்ஙனம் பொருந்துமோ! அக்கால வரசர்கள் இரவில் நகரிசோதனைக்காக வெளியில் புறப்படுவதென அறிவோம். அங்ஙனமின்றி இவ்வாறு அரசன் கண்ட கண்ட

---

அறமே ஆற்றல் என்று நம்புவோமாக. அந்த நம்பிக்கையுடன் நாம் அறிந்த கடமையை ஆற்றத் துணிவோமாக.

இடங்களில் நினைத்தபோதெல்லாம் செல்லுவதென்றால். அப்புறம் அவ்வரசர்களுக்கு மதிப்பேது, மரியாதையேது? இவர்கள் செல்லும்பொழுது ஔவையார் நீட்டிக்கொண்டிருந்த காலை மடக்கி, ஒட்டக்கூத்தரைக் கண்டதும் நீட்டினாள்! இது கவி யரசியாகிய ஔவையின் மேன்மைத் தன்மையைக் குறைக்காதா? அவர்தான் அவசரத்தில் செய்துவிட்டா ரென்றால், பெருந்தன்மை வகிக்கும் புலவர் திலகராகிய ஒட்டக்கூத்தர் இதை மதித்துக் கேட்கலாமா? கேட்பாரா? சரி கேட்டார். அதற்கு ஔவையார் கூறிய மறுமொழி எவ்வளவு ஒழுங்குத்தப்பிதமானது! அம்மொழிகளைக் கேட்டுக்கொண்டு அரசனால் பெருமைபெறும் ஒட்டக் கூத்தர் ஔவைக் கிழவியை அவமானஞ் செய்யாமல் வாளாவிருந்தது விந்தையே! அதன் பிறகு புலவரிருவரின் புத்திவன்மையைக் கண்டுபிடிக்க ஔவையாரால் பரீட்சை செய்யப்படுகிறது! ஒட்டக்கூத்தர் இதில் தவறி விடுவதால் "ஒட்டா ஒருமதி கெட்டாய்" என்ற பட்டம் பெறுகிறார்! இத் தொடர்மொழி எதுகை நயங்கொண்டு இன்பந்தருகின்றது! புகழேந்தியார் ஔவையின் கட்டளைப்படி, பாடிப் பரிசில் பெறுகிறார். என்ன விந்தை! ஒரு புலவரால்—அதுவும் நினைத்தபொழுது கவி இயற்றும் வல்லமையுடைய ஒரு புலவரால்—ஒரு அடியில் மூன்றிடங்களில் மதியென்ற சொல்லைத் தப் பாட முடியாமற்போனது வியப்பினும் வியப்பே! வேறொரு வரலாறு புத்தகத்தில்,

"பிள்ளை மதிக்கெம் மதியுமென்றன் பேதை யிழக்கும் பெருமதியே"

என்ற ஈற்றடி மூன்று மதியுடன் முற்றுப் பெற்றுள்ளதே! இதற்கு என் சொல்வரோ! இதைக்கொண்டு சிந்தித்தால் ஔவையார் ஒட்டக்கூத்தரை இகழவோ, புகழேந்தியைப் புகழவோ முடியாது போகும். ஔவையார் முதலில் ஒட்டக்கூத்தரை அவமதித்துக் காலை நீட்டியதும் மடமை யென்பதை அவர் உணர்ந்திருப்பார். ஔவையார்பேரில் இந்த மடமையை ஏற்றுவது மாண்பாகுமா? இதை எப் புலவரேனும் ஏற்பரா? சிந்திக்க.

இனி, தன் மனைவியுடன் சீதனமாய் வந்த புகழேந்தியை ஒட்டக்கூத்தர் சிறையி லடைக்க அதைச் சோழன் கவனியா திருந்தது அவன் நீதி அரசாட்சியை நிலை குலைத்ததாகும். அதற்கு எவ்வகையிலும் அரசன் இடந்தந்திருக்க மாட்டானென்பதே பொருந்துவது. நிற்க, அரசன் ஒட்டக்கூத்தருடன் உலாவி வரும்பொழுது புகழேந்தி சிறையிலிருந்த இடத்தருகே வந்து "தான் இரவில் குடைபிடித்து உலாப்போவது சரியா" வெனக் கேட்டது படிக்கும் எவருக்கும் அதிசயத்தை விளைவிக்காது போகாது. இச்சமயம் புகழேந்தியார் சிறையின் மேன்மாடத்தில் நின்றுகொண்டு உலாக்காட்சியை உவப்புடன் பார்த்துக்கொண் டிருந்தாரென்றும், சில பெண்களின் உதவியால் கைவிலங்குடன் வெளிப்பட்டுக் கூட்டத்தில் கலந்துகொண் டிருந்தாரென்றும் மாறுபட்ட வரலாறுகளுண்டு. "இவற்றைத் திரட்டிப் புடைத்துப் பதர் நீக்கி மணிகொள்வது எளிதன்று" என்றார் ஓராசியர்.

அரசன் கேட்ட கேள்விக்கு ஒட்டக்கூத்தர் பதில் சொல்ல வழி தெரியாது விழித்தார். உடனே புகழேந்தியார் சிறையிலிருந்தோ, சிறையின் மேன்மாடத்திலிருந்தோ, கூட்டத்திலிருந்தோ "அண்டர்மீ துலவி வாழும்" என்ற பொருள் நயஞ் சிறந்த பாட்டைப் பாடினார். விந்தை! விந்தை!! சமயத்தில் பாடத் தெரியாத, அல்லது பதில் சொல்லத் தெரியாத ஒட்டக்கூத்தரை எது கொண்டுதான் அரசன் ஆதரித்தானோ தெரியவில்லை! இது

அவன் அறிவையே தாழ்வுபடுத்துவதாகு மன்றோ? ஒட்டக்கூத்தருக்குக் "கோவையுலா அந்தாதிக்கு ஒட்டக்கூத்தான்" என்ற சிறப்புதான் ஏனோ?

பின்னர், சோழன் மனைவியைச் சமாதானஞ் செய்ய புலவரிருவரும் பாடல்கள் பாடுகின்றனர். இவற்றுள் முன்னது புகழேந்தியதென்றும், பின்னது ஒட்டக்கூத்தரதென்றும் தகராறிருக்கிறது. எது எவருடையதோ அதை அதனதன் ஆசிரியரே கூறவல்லர். இந்நிலையில் ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழிட்டவள் சோழன் மனைவிதானோ, வேறு எவரோ விளங்கவில்லை! சோழன் மனைவி "சமன் செய்து சீர்தூக்குங்கோல்" போன்ற மனத்தளேயாயின் ஒட்டக்கூத்தன் பாட்டைத் தூற்றியும்,புகழேந்தி பாட்டைப் போற்றியுங் கொள்ள வேண்டியதில்லை. செய்யுட் சுவையறிந்த அவ்வணங்கு "இழையொன் றிரண்டு" என்ற பாடலால் அகமகிழ்ந்து அப்பொழுதே கதவைத் திறந்து வெளிவந்திருப்பா ளென்பதில் என்ன தடை? 'பேதையர்க்கே, என்றதால் அப் பேதைக்குச் சின மூண்டதெனின், 'பேதமை யென்பது மாதர்க் கணிகலம்' என்ற விதியுளதே! அது கொண்டு ஒட்டக்கூத்தர் பாடினு ரென்பதில் இழுக்கொன்று மில்லையே! இவற்றைப் புத்திசாலிகள் ஆராய்ந்து உண்மை காண்க.

அதன்பின், இரு புலவரையும் சேர்த்து வைக்கும் இன்பக்கதை! புகழேந்தியார் ஒட்டக்கூத்தரைக் கொல்லக் கையில் கல்லொன்று கொண்டு சென்றார். புகழேந்தியார் கல்லேந்தியதுங் கனவியப்பே! இச்செயல் அவர் புகழையும் பெருமையையும் அடியோடு நசுக்குவதாகும். எனினும் புலவரிருவரும் பகைமை யொழிந்து அன்புடன் தழுவிகொண்டனரென்ற முடிவு உள்ளத்திற்கு உவகையை ஊட்டுகின்றது! இம்முடிவைக் காட்டிய ஆசிரியரை வாழ்த்தாதிருக்க என் மனம் இடந்தரவில்லை.

இன்னும் இடையில் பல செய்திகளுண்டு. அவற்றையெல்லாம் ஈண்டுரைப்பது இழுக்காமென விடப்பட்டன.

புகழேந்தியார், சிறையிலிருக்குங்கால் அல்லியரசாணி மாலை, பவளக்கொடி மாலை என்ற நூல்களை இயற்றினுரென்று கூறுவர். இது சரியன்றென்பதே தேர்ந்த புலவர் பலர் கருத்து. திவான்பகதூர் வி. கிருஷ்ணமாச்சாரியாரவர்கள் தாமெழுதிய ' பன்னிரு புலவர் சரித்திர''த்தில் 'புகழேந்தியார் இயற்றியதாகக் கதை பொருத்திக் கூறப்படும் அல்லியரசாணி மாலை முதலிய நூல்கள்......' எனக் கூறியுள்ளார். பொதுவாக நளவெண்பாவையும் இந்நூல்களையும் ஒருங்குவைத்து நோக்குவார்க்கு இவ்வுண்மை புலப்படாதுபோகாது.

இதுகாறுங் கூறியவற்றால், புலவர்கள் கதை யாவும் பொய்யென்ற கொள்கையை நிலைநிறுத்தவே இக் கட்டுரை எழுதப்பட்டதென எவரும் நினையாதிருக்க வேண்டுகிறேன். எதிலும் உண்மை காணவேண்டுமென்பதே எனது நோக்கம், மாறுபட்ட செய்திகளாலும் பொருந்தாக் கூற்றுக்களாலும் புலவர்களுக்கு இழுக்கே ஏற்படுகிறது. இதைக் களைய வேண்டுமென்பது என் பேரவா. இதற்கு அறிஞரே வல்லராவர். அன்னோர் எழுக! பொய்க்கூற்றுக்களை யோட்டி மெய்ச் செய்திகளை நிலைநாட்டுக! புலவர்களைப் பிடித்துள்ள பிணிகளை யொழித்து நலமுறச் செய்து நன்மையே பெறுக! இதுவே என் வேண்டுகோள். இறைவன் முன்னிற்க இனிது.

---

இன்று உன்னுல் கூடியமட்டும் நன்றாய்ச் செய். நாளை அதினிலும் நன்றாய்ச் செய்யும் ஆற்றல் பெறக்கூடும்.

# மதுவிலக்கு நீதி.



(வித்வஶ்ரீ. ம. இராஜகோபால பிள்ளை.)

(சங்கர—சங்கர—சம்போ என்ற மெட்டு.)

நண்பனே சொல்வதைக் கேளாய்—கேட்டால்
நலம் பெற்று வாழ்வாய் நீ நற்பெயர்க்காளாய் (நண்ப)



1. கட்குடி யால்வரும் தீதை—நேரில்
கண்டும் கையாடிக் கவிழ்வதோ போதை
வெட்கத்தையும் விட்டிப் பாதை—மேவி
வீண்சண்டை யிட்டு விழைவதேன் வாதை (ந)

2. ஈனம் அன்றோ மது பானம்—இதில்
எப்படி நிற்கும் நம் மெய்ப்புகழ் மானம்
தானம் தவம் முது ஞானம்—யாவும்
தவறும்; பெருகுமே நீச அஞ்ஞானம் (ந)

3. பஞ்சமா பாதகத் தொன்று—என்று
பன்னுவதைச் சற்றே உன்னிப்பார் நின்று
தஞ்சமென்பாரையுங் கொன்று—ஐயோ
தலைகால் தெரியாமல் அலைவதோ நன்று (ந)

4. தாயிவள் பெண்டிவள் என்றும்—நம்மைச்
சார்ந்தசோ தரியிவள் மகளிவளென்றும்
ஆயும் அறிவினைப் போக்கி—பேய்
ஆட்டத்தில் வைக்குமே அலங்கோலமாக்கி (ந)

5. நெளியும் புழுக்களை நீக்கி—வரும்
நிறை கள்ளை நெட்டியே வயிற்றுக்குள் போக்கி
களியுஞ் செருக்குங்கொண் டூக்கி—வெறுங்
கவுரவம் பேசிலென்? கயவரைத் தாக்கி (ந)

---

கடைப்பட்ட இழிதொழில் செய்ய அஞ்சுதல் வீரம். அது நமக்குச் செய்யப்படின் அதைப் பொறுத்துக்கொள்ளுதலும் வீரமே.

6. சான்றோர் இகழும் தூர் வாழ்வை—பெற்ற
தாயும் வெறுக்கிறாள் எண்ணியே தாழ்வை
ஆன்றபே ரல்லலே சூழ்வை—மீளா
அருநரகக்குழி யதனிலே வீழ்வை (ந)

7. பாடுபட்டுப் பணந் தேடி—அதைப்
பாதுகா வாமலே பறக்கவிட்டோடி
நாடுந் தீயோருற வாடி—கண்டோர்
நகைத்துப் பழிக்கவே நலிவதேன்? வாடி (ந)

8. மாயையில் முன்பே மயங்கி—நல்ல
மதிகெட்டுளோம் இன்னும் மயக்கில் முயங்கி
நாயைப்போல் அலைய உயங்கி—தூர்
நாற்றக்கள் ஏன்குடிக்கின்றாய்? இயங்கி (ந)

9. தன்னைத்தான் உணரவே தீரும்—நம்மைத்
தாக்கும் பிறவிப் பிணியென ஓரும்
பொன்னைப் பொருமொழி தேரும்—துய்ய
புத்திகொண்டால் பிணக் கள்ளாசை பேரும் (ந)

10. நமது சுகவாழ்வைக் கோரி—புவி
நத்தும் மகான் காந்தி நவிலுரை தேரி
மருளக்குடிப்போரை நேரில்—கண்டு
மறியல் செய்வோம் அன்பு வார்த்தைகள் கூறி. (ந)

# முன்பணம் அனுப்பிய நேயர்கட்கு ஓர் அறிவிப்பு.

அன்பு நிறைந்த நண்பீர்!

சென்ற வைகாசிமீ "ஆனந்தபோதினி" சஞ்சிகையில் தெரிவித்தவண்ணம், 17-வது ஆண்டிற்குரிய சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்பிய நேயர்கள் எல்லோருக்கும் குறிப்பிட்ட இனும் பொருள்களை விரைவில் அனுப்ப ஏற்பாடு செய்திருக்கிறோம். இனும் பெற்றவர்களின் சந்தா எண்கள் அடுத்த புரட்டாசிமீ "ஆனந்தபோதினி"யில் வெளியிடப்படும் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

மானேஜர்.

---

செல்வத்திலோ களியாட்டிலோ புகழிலோ பற்றுடையவன் எவனும் ஜனங்களிடைப் பற்றுடையவன் ஆகான்.

வாசிஷ்டம்

# வைராக்ய ப்ரகரணம்

(பண்டித. K. V. தேவராஜ சாஸ்திரிகள்.)

“ஓ தபசியே! ராமருக்கு இக்காலம் பதினாறு வயதுகூட ஆகவில்லையே! எங்ஙனம் மாயாவிகளான அரக்கர்களுடன் யுத்தம் செய்வான்? நான் அநேகம் அக்ஷௌகினி சேனைகளுடன் அரக்கர்களுடன் போர்புரிந்து அவர்களைக் கொன்று யாகத்தையும் காப்பாற்றுவேன்” என்று சொன்னார்.

இதைக்கேட்டு விஸ்வாமித்திரர் மிகக் கோபங்கொண்டு உதடு துடிக்கத் தமது காலால் பூமியை உதைத்து நின்று தசரதரைப் பார்த்து “ஓ அரசே! மிகக் கியாதிபெற்ற இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த உனக்கு இது தர்மமோ?” என்று கேட்டார். இச்சமயம் தசரதருடைய குல குருவான வஸிஷ்டர் அவரைப் பார்த்து “ஓ தசரதனே! மூவுலகிலும் கியாதிபெற்ற இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த நீ இவ்விதம் அதர்மத்தைச் செய்வது உனக்கும் உனது குலத்திற்கும் அபகீர்த்தியை விளைவிக்கும். இப்பொழுதே ராமரைக் கொடுத்து விடு. உனக்கும் உனது குமாரர்களுக்கும் மிகுந்த க்ஷேமம் உண்டாகும்” என்று சமாதானம் செய்தார்.

தசரதர் தூதர்களைக்கொண்டு ராமரை வரவழைத்தார். இரு பாரிசங்களிலும் பிருகஸ்பதி சுக்கிராசாரியரால் சேவிக்கப்பட்ட இந்திரன்போல் வசிஷ்ட விஸ்வாமித்திரர்களால் சேவிக்கப்பட்ட சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் தமது பிதாவை ராமர் பார்த்து வெகுதூரத்திலேயே சாஷ்டாங்கமாக வணங்கினார். தசரதர், ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்களை ஆலிங்கனம் செய்து மடியில் உட்காரவைத்து புலகாங்கிதராக ராமரை நோக்கி “ராமா! நீ ஏன் இச் சிறுவயதிலேயே வருத்தப்படுகிறாய்? உனக்கு இங்ஙனம் மனக் கவலை உண்டாகக் காரணம் என்ன?” என்று கேட்டார். ராமர் அதைக் கேட்டு, மேகத்வனியால் மயில் சந்தோஷ மடைவதுபோலச் சந்தோஷ மடைந்து “ஓ ஸ்வாமி! நான் எனது பிதாவின் கிருஹத்தில் வளர்ந்து, கிரமமாக யௌவனத்தை அடைந்து, குரு குலத்தில் வேதாப்யாசம் சாஸ்திராப்யாசம் முதலியவைகளைச் செய்து, அநேக தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து, பற்பல புண்ணிய க்ஷேத்திரங்களை தரிசித்து எனது புத்தியைக் கொண்டு யோசித்தேன். இது என்ன உலகம்? இது என்ன சுகம்? காற்றில் அசையும் ஆல் இலையின் நுனியிலிருக்கும் ஜலபிந்துபோல் க்ஷணத்தில் நாசமடையக் கூடிய இவ்வுலகத்தில் என்ன சுகம் உளது? இங்கு பிராணிக ளெல்லாம் புண்ணிய பாவங்களால் நானாவித யோனிகளில் பிறந்து இறந்து கஷ்டம் அடைகின்றன. இவ் வுலக வாழ்க்கையும் நீரில் உண்டாகும் குமிழி போலவும்,

---

துன்பத்தை நன்கு பொறுக்கக்கூடியவனே எதையும் நன்கு இயற்றக்கூடும்.

ஆகாயத்தில் தோன்றும் நகரம்போலவும் ஒரே க்ஷணத்தில் அழியும் இயற்கை உடையது. இவையெல்லாம் சம்பரனுடைய மாயைக்கு ஒப்பானவை என்று யோசித் தறிந்து நான் வருத்தப்படுகிறேன்'' என்று சொன்னார்.

மறுபடியும் ராமர், உலகத்தி லிருக்கும் பாமரர்களுக் கெல்லாம் சகல சுகத்தையும் அளிக்கும் ஐஸ்வரியத்தைப் பலவிதத்திலும் நிந்திக்கிறார். ஐஸ்வரியம் ஓரிடத்திலும் நிற்பதில்லை. ஐஸ்வரியம் வித்துவான்களையும் சாதுக்களையும்கூடக் கெட்ட வழிகளில் பிரவேசிக்குமாறு தூண்டுகிறது. செல்வம் அஞ்ஞானமாகிய மதயானை வாஸம் செய்யும் விந்தியமலை. நற்செய்கைகளாகிய தாமரை மலர்களுக்கு இரவு. துக்கமாகிய ஆம்பல் மலருக்கு சரத்காலத்து நிலா. அறிவாகிற விளக்கை அணைக்கும் புயல்காற்று. காமம், க்ரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், பயம் முதலியவைகள் சஞ்சாரம் செய்யும் ராஜவீதி. வருத்தமாகிய விஷத்தை வளர்க்கும் பெரும் வயல். வைராக்யமாகிய கொடியை நாசம் செய்யும் பனி. விகாரங்களாகிய ஆந்தைகள் உல்லாசமாக உலாவும் இரவு. விவேகமாகிய சந்திரனை கிரஹிக்கும் ராகு. புயல்காற்றில் அசைந்துகொண் டிருக்கும் தீப ஜ்வாலைபோல் மிகச் சஞ்சலமானது. பிராணிகளினின் ஆயுளும் ஆலிலைபோல் மிகச் சஞ்சலமாகவே இருக்கின்றது. கடலின் அலைகளைக் கயிற்றைக்கொண்டு கட்டலாம். காற்றை ஒரு அறையில் அடைக்கலாம். ஆகாயத்தைக் கத்தியால் வெட்டலாம். ஆனால் ஆயுளைக் கட்டமுடியாது, அடைக்க முடியாது, வெட்டவும் முடியாது. அலையைப் பிடிக்கலாம். ஆகாயத்தைப் பாயாகச் சுருட்டலாம். ஆகாயத்தில் தோன்றும் மின்னல் கொடியையும் பிடிக்கலாம். ஆகாயத் தாமரைப் பூவையும் முகரலாம். ஆயுளைப் பிடிக்கவும் முடியாது, சுருட்டவும் முடியாது. ஆயுள் என்பது 4440 வியாதிகளாகிய பக்ஷிகளைத் தாங்கும் ஒரு பெரிய மரமாம். அகங்காரம் என்பது ஆபத்திற்கெல்லாம் காரணம். அகங்காரமே மனிதர்களுக்கு உண்டாகும் எல்லா வியாதிகளையும்விட ஒரு பெரும் வியாதி. அது சாந்தகுணமாகிய சந்திரனைப் பிடிக்கும் ராகு. நற்குணங்களாகிய தாமரை மலர்களை நாசம் செய்யும் நீரிடி. ஆகையால் அப்பேர்ப்பட்ட அகங்காரத்தை நான் விட்டுவிடுகிறேன். ஓ மாமுனியே! மனம் மிகச் சஞ்சலமானது வஜ்ரத்தைவிட மிகக் கடினமானது. கடல் நீரைக் குடித்துவிடலாம். மேருமலையை அசைக்கலாம். நெருப்பையும் பானம் செய்யலாம். மனதை வெல்ல முடியாது. மனமே சகல துக்கங்களுக்கும் அனர்த்தங்களுக்கும் காரணம். மனதைவென்றால் மூவுலகையும் வெல்லலாம். அஞ்ஞானமாகிய இரவில் ராகத்வேஷாதிகளாகிய ஆந்தைகள் வசிக்கின்றன. அஞ்ஞானமாகிய இருளால் மூடப்பட்ட மனமாகிய பெருங்காட்டில் ஆசையாகிய ஒரு பெண் பிசாசு உல்லாசமாய் நாட்டியம் செய்துகொண் டிருக்கிறது. கத்திமுனையை விடவும், வஜ்ராயுதத்தை விடவும், ஊசியை விடவும் ஆசை மிகக் கூர்மையானது. ஆசை சூரனையும், வித்வான்களையும்கூட ஒரே க்ஷணத்தில் புல்லுக்குச் சமமாக்கி விடும். ஆகையால் ஆசையை ஒழித்துவிட வேண்டும். பற்பல அனர்த்தங்களுக்கும் காமக்ரோதங்களுக்கும் ஆசையே காரணமாம்.

பற்பல அனர்த்தங்களுக்கும் இவ்வுடலே காரணமாம். இரு கைகளாகிய பெரும் கிளைகளை உடையதாகியும், பற்களாகிய பக்ஷிகளை யுடையதாகியும்,

---

நம் இருதயத்தில் ஒரு கடவுள் உண்டு, மனச்சான்றே அது.

இரு கண்களாகிய பொந்துக்களை யுடையதாகியும், சிரஸாகிற பெரும் பழத்தை உடையதாகியும் இருக்கிற இவ்வுடல் யாரைச் சேர்ந்தது? இதில் நான் என்னு டையது என்ற எண்ணம் வைக்கலாமா?

ஆற்றைக் கடப்பதற்காகக் கூலிபேசி ஏறிக்கொண்ட படகிலும், சம்ஸாரக் கடலைக் கடப்பதற்காகப் புண்ணிய பாவங்களைக் கொடுத்து வாங்கிக்கொண்ட இவ் வுடலிலும் ஆசை வைக்கலாமா?

இரு தோள்களாகிய பெரும் கந்தங்களை யுடையதாயும் கைகளாகிய இலைகளையுடையதாயும், பஞ்சேந்திரியப் பறவைகளுக் காதாரமாயும், காம னுகிற பிரயாணிக்குத் தங்குமிடமாயும், அகங்காரமாகிற கழுகுக்கு வாஸஸ் தானமாயும் இருக்கும் இவ்வுடலாகிய பெரும் ஆலமரம் சுகத்தைத் தருமா?

அஹங்காரமாகிய பிரபுவிற்கு உல்லாச அந்தப்புரமாயும், சுகமாகிய போக சாதனங்களை உடையதாயும், துக்கமாகிற குழந்தைகளின் அழுகைக் குரல் நிரம்பியதாயும், கெட்டெண்ணமாகிற தாசியின் உல்லாச இடமாயும், சிந்தை யாகிய பெண் குழந்தை விளையாட வீடாயும், ஆசையாகிற துஷ்டக் கருங் குரங்குகளை உடையதாயும், மனமாகிய பெரும் எலியால் சதா நாசமாக்கப் படுகிறதாயும், பிறப்பு முதல் ஒன்ருகவே வாஸம்செய்து இறக்கும் தருணத்தில் ஜீவனைப் பின்தொடர்ந்து செல்லாமல் தனித்திருக்கும் நன்றி யறிவு இல்லாத தாயும் உள்ள இவ் வுடம்பை நம்பலாமா?

இவ்வுலகில் முன் ஜன்மத்திய புண்ய பாவங்களுக்குத் தக்கபடி மறு ஜன்மத்தை அடைந்து, பசி, தாகம், பிணி முதலியவைகள் நிறைந்த பால்ய மும், துக்கத்திற்கு மாத்திரம் காரணமாகிறது. ஏனென்ருல் தாய் தந்தை களுக்கும், மற்ற ஜனங்களுக்கும், தன்னைவிடப் பலமுடையவர்களுக்கும் பயப் படவேண்டும். இவ்வாறு எப்பொழுதும் பயத்திற்கு ஆஸ்பதமாய பால்யம் சுகத்தைத் தருமா?

பால்யத்தை மிகுந்த கஷ்டத்துடன் கடந்து காமம், க்ரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் முதலிய அநேக அனர்த்தங்களுக்கு ஏதுவான யௌவனத்தை அடைந்தும், தனக்கு இஷ்டமான சுகங்களை அனுபவித்தும், தனது மனமாகிய காட்டில் உல்லாசமாக உலாவிக்கொண் டிருக்கும் காமப் பிசாசால் பீடிக்கப்பட்டுப் பற்பல துன்பங்களை அடைகின்ருன். மனிதர்க ளுக்கு அநேக வியாதிகளையும், தீமைகளையும் விளைவிக்கும் பிரத்தியக்ஷ நரகமான மாம்ச பதுமையான பெண்கள் சுகத்திற்குக் காரணம் ஆவார்களா? மேருமலையின் சிகரத்தில் விளங்கும் கங்கையின் பிரவாகம்போல் பிரகாசமான முத்துமாலைகளை அணிந்திருந்த பெண்களின் ஸ்தனங்களை மயானத்தில் நாய் களும் நரிகளும் தின்பதை நாம் பார்த்ததில்லையா? வண்டுகளின் இறகுபோல் அதி சஞ்சலமாய யௌவனத்தையும் யௌவன சுகத்தையும் நான் விரும் பேன். விவேகத்தால் பரம பதத்தை அடைய யத்தனிப்பேன். பற்பல சுக துக்கங்களை அனுபவித்து யௌவனத்தைக்கடந்து கவலைகளுக் கெல்லாம் பிறந்த வீடான கிழத்தனத்தை அடைகிருன். அப்பொழுது பற்களெல்லாம் உதிர்ந்து விடுகின்றன. கேசங்கள் நரைக்கின்றன. அங்கங்கள் தளருகின் றன. ஆனல் ஆசை ஒன்று மாத்திரம் அடங்குவதில்லை. இவ்வாறு காலம்

---

மனிதர்களின் சகல ஐஸ்வரியங்களையும் அழிக்கின்றன. இதை யறியாமல் அவிவேகிகளான ராஜகுமாரர்கள் வேட்டையாடி அநேக பிராணிகளை வதைத்துக் காலங் கழிக்கின்றனர்.

காலம், நாடுகளைக் காடுகளாகவும், காடுகளை நாடுகளாகவும், ஆறுகளைப் பாலைவனங்களாகவும், பாலை வனங்களை ஆறுகளாகவும் மாற்றும் திறமை வாய்ந்தது. இவ்வாறு கால சக்தியால் உலகம் ஒவ்வொரு க்ஷணமும் மாறிக் கொண்டிருக்கையில் இவ் வுலகில் ஆசை வைக்கலாமா? க்ஷணப் பொழுதில் அழியக்கூடிய கனவில்கண்ட பொருள்போன்ற இவ் வுலகில் ஜனங்கள் காம வெறிகொண்டு அநேகம் தீச் செயல்களைச் செய்து தங்களது வாழ்நாளை வீணாக்கிக் கொள்ளுகிறார்கள். இவ்வுலகில் இருக்கும் தாவரங்களும், ஜங்கமங்களும் கனவில்கண்ட பொருள்போல ஒரு க்ஷணப்போதில் அழியும் இயல்புடையவையாம். இன்றைக்கு தண்ணீர் இல்லாமல் வற்றிய கடலைப்போல் காணப்படும் ஒரு பெரும் பாலைவனமும், நாளைக்குப் பெரும் கடலாகலாம். இந்த ப்ரகாரம் தோஷமாகும் பெரும் காட்டு நெருப்பால் வெந்த என் மனதில் இவ்வுலக சுகம் சுகமாகத் தோன்றுவதில்லை. இந்த ராஜ்ஜியமும், அயோத்யா நகரமும், சிங்காரத் தோட்டங்களும், இவ்வழகிய பெண்மணிகளும் எனக்குச் சந்தோஷத்தை அளிப்பதில்லை.

விஷய சுகம் காலகூட விஷத்தைவிட மிகக் கொடியது. ஏனெனில் விஷம் இக் காயத்தை மாத்திரம் எரிக்கும். விஷய சுகம் அநேக ஜன்மங்களில் உண்டாகும் காயங்களை யெல்லாம் எரிக்கும்.

ஆகையால் அநேக ஜன்மாந்தர வாசனைகளாகிற புதருகளால் செல்ல முடியாத துன்பங்களாகிற கூரிய முட்கள் நிறைந்த இப்பெரும் அஞ்ஞான வனத்தை வெட்டி வெட்ட வெளியாக்க ஞானமாகும் ஒரு கோடரியை எனக்குக் கொடுக்கவேண்டும். இல்லாவிடில் நான் ஆகாரமில்லாமல் இந்தத் தேகத்தை விட்டு விடுவேன்.

ஸ்ரீராமருடைய இவ்வரிய வைராக்ய மொழிகளைக் கேட்டு பிரம்ம ஞானிகளில் சிறந்த குல குருவான வசிஷ்டர், விஸ்வாமித்திரர் முதலிய மாமுனிகளும், ஜயந்தன் முதலிய மந்திரிகளும், தசரதர் முதலிய அரசர்களும், கௌசல்யை முதலிய அந்தப்புர ஸ்திரீகளும் ஆச்சரியம் அடைந்து மௌனம் சாதித்தனர். அரண்மனையில் இருக்கும் கிளிகளும் மான்களும், சப்தமில்லாமல் அசைவற்று நின்றன. ஆகாயத்தில் சஞ்சாரம் செய்யும் தேவர்களும், கந்தர்வர்களும், சித்தர்களும், சாரணர்களும், நாரதர், வியாஸர் முதலிய முனிவர்களும், ராமருடைய ரமணீயமான வார்த்தைகளைக் கேட்டு மௌனமாக நின்றனர். சித்தர்கள் எப்பொழுதும் தேவலோகத்தில் சஞ்சாரம் செய்யும் நாம் இதுபோன்ற மொழிகளை இதற்குமுன் கேட்டதில்லை. இம்மொழிகள் தேவர்களுக்கு தேசிகனான ப்ருகஸ்பதிக்கும் ஆச்சரியத்தை விளைவிக்கும். இவைகளுக்கு வசிஷ்டரும் விஸ்வாமித்திரரும் கூறும் மறு மொழியைக் கேட்க நாம் தசரதருடைய சபைக்குச் செல்லுவோமாக என்று பேசிக்கொண்டு நாரதர் வியாஸர் முதலியவர்களும் தசரதர் சபைக்கு வந்தனர்.

---

சர்க்கார் தயவு வேண்டுவது தவறு ஒன்றே. உண்மைக்கு அது வேண்டுவதில்லை.

# விசித்திர விநோதம்



## "நல்ல சமயம்"

பிரயாணி:—"இந்த வீட்டுச் சொந்தக்காரர் இருக்கிறாரா?"

வேலைக்காரன்:—"ஆமாம்! ஆனால் அவர் உள்ளே உறங்கிக்கொண்டிருக்கிறார்"

பிரயாணி:—"வெகு நல்ல சமயம்! நான் அலாரம் கெடியார வியாபாரி! ஒன்றை எடுத்துக்கொண்டுபோய் அது நன்றாய் வேலை செய்கிறதா இல்லையா என்று பார்"

***

## "ஆச்சரியம்"

தமக்குச் செய்து வைத்திருந்த பலகாரத்தைப் பரிசாரகன் தின்றுகொண்டிருப்பதை எஜமான் பார்த்துவிட்டார்.

எஜமான் :—"உன் சங்கதியைக் கண்டு நான் ஆச்சரியப்படுகிறேன்."

பரிசாரகன்.—"தங்கள் சங்கதியும் எனக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது. ஆபீசுக்குப் போன தாங்கள் திரும்பி வரமாட்டீர்கள் என்று நினைத்துவிட்டேன்."



---

உனக்குத் தெரிந்தன எல்லாம் நன்றாய் அனுஷ்டிக்க முயல்க. அங்ஙனம் செய்தால் நீ அறிய விரும்பும் மறை பொருள்களை எல்லாம் சரியான காலத்தில் தெரிந்துகொள்வாய்.

"தூக்கத்திற்கு மருந்து"



நண்பன் :—" கொடுக்கவேண்டிய கடன்களை நினைக்க நினைக்க இரவெல்லாம் எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை."

மற்றவன்:—"அப்படியா? ஏன் முன்னாடியே என்னிடம் சொல்லியிருக்கக் கூடாது ?"

நண்பன் :—" மறந்துபோனேன்—உண்மையில் கொஞ்சம் பணம் கொடுப்பீர்களா ?"

மற்றவன்:—"என்னிடம் பணம் இல்லை. தூக்கத்திற்கு நல்ல மருந்து இருக்கிறது. அதைக் கொடுக்கலாம் என்று கேட்டேன்."

***

" கீழ்ப்படிதல் "

வாத்தியார் :—" எல்லாரும் கப்சுப் என்று வாயை மூடிக்கொண்டிருக்கவேண்டும்-மூச்சுங்கூட விடக்கூடாது. ஊசி விழுந்தாலும் சப்தம் கேட்கவேண்டும்"

எல்லாரும் வாயை மூடிக்கொண்டு சும்மா இருந்தபோது,

ஒரு மாணவன் :—" தங்கள் உத்திரவுப்படி நாங்கள் நிசப்தமாய் இருக்கிறோம் சார் !—எங்கே ?—ஒரு ஊசியைப் போடுங்கள் பார்க்கலாம்."



***

"முன்பு என்னிடம் ஒரு அருமையான நாய் இருந்தது. அது காலிகள் இன்னார், பெரியமனிதர் இன்னார் என்று நன்றாய்த் தெரிந்துகொள்ளும்."

"சரிதான்! அது என்ன ஆயிற்று ?"

"நான் அதை வேறொருவருக்குக் கொடுத்துவிட நேர்ந்தது!—என்னையே கடித்துவிட்டது."

---

என் பாவங்கள் எல்லாவற்றையும் வெளிவிட்டுச் சொன்னேன். சொன்னவுடன் ஜபிக்க முடிந்தது. என் முழு மனதோடு ஜபித்தேன். இப்பொழுது நான் வந்த மார்க்கமே பச்சாத்தாபம்.

"பழுது"



கடைக்காரன்:—"ஒரு வருஷத்திற்கு முன் விலை கொடுத்து வாங்கிக்கொண்டு போன கிராமபோனை நாங்கள் திருப்பி எடுத்துக்கொள்ளமாட்டோம். நீங்கள் உடனே கொண்டுவந்து கொடுத்திருக்க வேண்டும். ஏன்? அதில் ஏதாவது கெடுதல் ஏற்பட்டிருக்கிறதா?"

நாட்டுப்புற பெரிய மனிதர்:—" ஆம் ஐயா! ஊசி ஒடிந்துவிட்டது."

* * *

"கொசு ஓட்டல்"

ஒருவர் தமது மகன் முதுகில் உட்கார்ந்திருந்த ஒரு கொசுவை ஓட்ட மெதுவாய் முதுகைத் தட்டினார். பையன் "என்ன அப்பா?" என்று கேட்க "வேறொன்றும் இல்லையடா-கொசுவைத் துரத்தினேன்" என்றார். ஒருநாள் தகப்பனார் உட்கார்ந்து உற்சாகமாய் வாசித்துக்கொண்டிருந்தார். பையன் திடீரெனப் பக்கத்தில் சென்று கன்னத்தில் பளீரென ஒரு அறை கொடுத்தான்.



தகப்பனார்:—"ஏண்டா மடையா இப்படி அடித்தாய்?"

பையன்:—"அடிக்கவில்லை அப்பா! கொசுவை ஓட்டினேன்"

* * *

"ஏன் மிகுந்த முகவாட்டத்துடன் உட்கார்ந்திருக்கிறாய்?"

"எப்படிக் காதல் உண்டாக்குவது?" என்ற பெயருள்ள ஒரு புஸ்தகத்தை வாங்கினேன்-படித்தேன்-என்ன செய்வது என்று இப்பொழுது ஒன்றும் விளங்கவில்லை.

"ஏன்"

"பெண்ணின் கையை எடுத்து, அவளது கண்களையே கூர்மையாக நோக்கி "நான் உன்னைக் காதலிக்கிறேன் கோமளம்!" என்று சொல்லவேண்டும் என்பதாக அப்புஸ்தகத்தில் காணப்படுகிறது."

"அதில் தப்பு என்ன?"

"எனது பிரியையின் பேர் சரசா"

---

ஒன்றே உள்ளது. பல மாறி மறையும். விண்ணின் வெளிச்சம் என்றும் ஒளி தரும்' மண்ணின் நிழல்கள் பறந்தோடி விடும்.

## "உத்தியோகம்"

நாட்டுப்புறத்தான்:—"உங்களுக்கு என்ன உத்தியோகம்?"



பங்கா இழுப்பவன்:—"நான் செக்ரட்டரியட் ஆபீஸில் இருக்கிறேன்."

நாட்டுப்புறத்தான்:—"ஓ! அப்படியா? ஆனால் உங்களுக்குப் பெரிய பெரிய மனுஷாளை யெல்லாம் நன்றாய்த் தெரியும்போல் தோன்றுகிறதே!"

பங்கா இழுப்பவன் :—"சந்தேகம் என்ன? நான் எப்பொழுதும் கவர்னர் பக்கத்திலேதான் இருப்பேன்."

***

சைன்ஸ் வாத்தியார் :—"கதவோ, சுவரோ, மற்றெதுவோ—ஒன்றும் தடுக்க முடியாததும், எங்கும் நிறைந்துள்ளதுமான பொருள் எது?"

ஒரு பையன்:—"நான் சொல்லுகிறேன் சார்!—வெங்காய நாற்றம் சார்!"

***

வீட்டு எஜமானி:—(வேலைக்காரியைப் பார்த்து) "ஏண்டீ! ஏன் கூடத்தை இரண்டுதரம் பெருக்கினாய்?"

வேலைக்காரி:—"நாளை வேலையையுங்கூட இன்றைக்கே செய்துவிடலாம் என்றுதான் அம்மா!"



உலகில் ஒவ்வொரு உயிர்க்கும் தேவையான உணவு இயற்கையாகவே அமைந்துள்ளது. அளவுக்கு மீறி அபகரித்துண்போர் மற்றவர்க்குரிய உணவின் ஒரு பாகத்தை அநியாயமாய்க் கவருபவராவர். —காந்தியடிகள்.

***

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தனுள், முதலில் நின்றதான சுவையை ஒருவன் அடக்கியாளக் கூடுமானால், ஏனைய நான்கினையும் எளிதில் அடக்கிவிடுவான்.

***

நாம் உணவு விஷயத்தில் நமது சிந்தையை அதிகம் செலவிட்டு வருகின்றமையால் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் அடிமைத் திறத்தையும், மிருகத் தன்மையையும் அறியமுடியாமலிருக்கின்றோம்.

---

சிறுவர்களுக்குரியது பிரதமக் கல்வி அறிவு ஊட்டுவதன்று. நல்ல வழக்கங்கள் அமைப்பதேயாகும்.




# கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(78-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

இராஜ:—"ஆஹா உட்கார். என்னோடு சமாதானம் செய்து கொள்ளாவிட்டால் எல்லாச் சங்கதிகளையும் பகிரங்கப்படுத்தி விடுவேன்" என்றான். அச்சமயம் தாழ்வாரத்தின் கோடியில் ஆட்கள் அரவம் உண்டானதை ஆனந்தஸிங் தெரிந்து கொண்டான். அச்சந்தடி இராஜவேலுக்குத் தெரியவொட்டாமல் கிட்டு தன் நாற்காலியில் சத்தமுண்டாக்கிக் கொண்டே அஜாக்கிரதையாய்ச் செய்பவன்போல் மேலிருந்த புத்தகத்தைக் கீழே தள்ளி விட்டான்.

இராஜவேல் குனிந்து அதை யெடுத்துக்கொண்டு நிமிர்ந்து உட்காருவதற்குள் கிட்டு தன் கைத்துப்பாக்கியை யவன் முகத்திற்கு நேராய் நீட்டிக்கொண்டு.

"என்ன? சமாதான நிபந்தனையா கேட்கிறாய்?" என்று கோபத்தோடு கேட்டான்.

மறு விநாடி "மெய்யாகவே" என்ற ஒரு மெதுவான சத்தம் உண்டானதும், அவன் நிதானிப்பதற்குள் துப்பாக்கி பிடித்தகைக்கும் மற்றொரு கைக்கும் சேர்த்து விலங்கு பூட்டப்பட்டதும், ஆனந்தஸிங் அவன் கையிலிருந்த துப்பாக்கியையே இராஜவேலிடம் கொடுத்து இவன் வாயைத் திறந்தால் உடனே சுட்டுத்தள்ளு என்று கூறிவிட்டு, வாசற்படி யருகில் சென்று கிட்டுவின் குரல்போல் "நண்பர்களே! ஜெயம் வாருங்கள்" என்று கூவிவிட்டுக் கதவின் பின் மறைந்தான்.

உடனே பிச்சன் முன்னும் குள்ளன் பின்னுமாய் உள் நுழைந்தார்கள். முன் வந்த பிச்சன் ஆனந்தஸிங்கின் ஒரே குத்தால் மூர்ச்சையாய் விழுந்து விட்டான். குள்ளன் என்ன சங்கதி என்று பார்ப்பதற்குள் அவன் கரங்களுக்கு விலங்கு பூட்டப்பட்டது.

---

ஒவ்வொருவனுக்கும் உன் செவியைச் சாய். ஆனால் சிலரிடமட்டுமே பேசு. ஒவ்வொருவருடைய கண்டனத்தையும் ஏற்றுக்கொள். ஆனால் உன் முடிவை வெளியிடாதே.

ஆனந்தஸிங் அவனை யறைக்குள் தள்ளி கதவை மூடிக்கொண்டு மூர்ச்சையாய்க் கிடக்கும் பிச்சன் கரங்களுக்கும் விலங்கைப் பூட்டிவிட்டு, நோய்வந்து கிட்டுவின் எதிரில் ஒரு நாற்காலியை யிழுத்துப் போட்டு உட்கார்ந்துகொண்டு அவனை நோக்கி,

"ஏன் நண்பரே! உமது ஏற்பாட்டிற்கு, நான் ஆயத்தம் செய்த நல்வரவு எப்படி யிருக்கிறது?" என்றான்.

கிட்டு:—நான் ஏற்படுத்தியது போன்ற அவ்வளவு நேர்த்தியானதல்ல. ஆயினும் போதுமானது. இப்போது நான் சமாதானம் செய்துகொள்ளச் சம்மதிக்கிறேன்.

ஆனந்:—"அப்படிக் கூறுவாயென்று எனக்கு முன்னமே தெரியும். இனி உன் உதவி எனக்கு வேண்டுவதில்லை. நான் எனக்கு வேண்டியச் சங்கதிகள் யாவும் தெரிந்து கொண்டேன். உனக்குத் தெரிந்திருப்பதிலும் கொஞ்சம் அதிகமே தெரியும். உனக்கொரு ஆக்ஷேபனையு மின்றேல் நான் இனி யாவும் பதனம் செய்துவிட்டுச் சயனித்துக்கொள்ளப் போகிறேன். நித்திரை செய்யவேண்டும். என் வரையிலாவது "இந்த ஆள் என் நண்பனான இராஜவேல்," என்று கூறிவிட்டு கிட்டுவும் பிச்சனும் என்ன தந்திரம் செய்தும் அவர்கள் பேச்சைச் செவியில் போட்டுக்கொள்ளாமலே பலமான கயிற்றால் மூவருடைய கால்களையும் கரங்களையும் நன்றாய்க் கட்டிவிட்டு மஞ்சத்தில் படுத்து உண்மையாகவே நித்திரைபோய்விட்டான். அவர்கள் மூவர் அறைக்குள் இருப்பதால் இராஜவேலுக்கு ஒரு விநாடிகூட உறக்கமேனும் வரவில்லை.



## 23-வது அத்தியாயம்

ஆனந்தஸிங் பொழுது விடிந்ததும் கள்ளர்க்கு இராஜவேலைக் காவலாய் வைத்து விட்டு "எவனாவது அசைந்தால் உடனே சுட்டுத் தள்ளு" என்று கூறிவிட்டு, முன்னாடி இரவு மங்கம்மாளிடமிருந் தகப்பட்ட சிறுபுத்தகத்தில் என்ன சங்கதி யிருக்கிறதென்று சோதிக்கவெண்ணி உலகநாதம் பிள்ளையின் வீட்டிற்குச்சென்று, அவர் மனைவி நித்திரை விட்டெழுந்து உடுத்திக்கொண்டு வருமட்டும காத்திருந்து அவளைக் கண்டான்.

அம்மாது பயத்தோடு "ஏதாவது சம்பவித்ததோ?" என்றாள்.

ஆனந்த:—கெடுதியான தொன்றுமில்லை யம்மா! உன்னால் இதை வாசிக்க முடியுமா பார்! என்று மங்கம்மாளிட மிருந்து அகப்பட்ட புத்தகத்தை அம்மாதின் கையிலளித்தான்.

---

போராட்டத்தின் கடைசி முடிவு யாதென்று வினவினால் வெற்றி என்று விடையிறுப்பேன். இப்பொழுது யாது விளையும் என்று கேட்டால் மரணம் என்று மறுமொழி தருவேன்.

அம்மாது அதை விரித்துப் பார்த்ததும், மிக்க வியப்போடும் சந்தோஷத்தோடும் "ஹா! என் இது எங்கள் இரகசியபாஷை" என்று கூறிவிட்டு, அப்புத்தகின் ஒவ்வொரு பக்கத்தையும் திருப்பிப் பார்த்து, மிக்க ஆத்தாத்தோடு,

"ஐயோ! கடவுளே! இப்படியும் நடக்குமா! அட சண்டாளப் பேயே!" என்ருள். பிறகு தான் கூறுவதை நிறுத்திவிட்டு, தன் மனத் துடிப்பை மெதுவாய் அடக்கிக் கொண்டு "ஹே! கருணைக் கடலாகிய பகவானே! உனக்கு மிக்க வந்தனமளிக்கிறேன். மனப்பூர்வமாய் உம்மை வாழ்த்துகிறேன்." என்று தன் கண்களில் ஆனந்த பாஷ்பம் பொங்கிக் கொண்டே, ஆனந்தவஸிங்கை நோக்கி, "என் மகள் இறந்து போகவில்லை; அவள் உயிரோடிருக்கிருள்" என்ருள். ஆனந்தவஸிங் ஆவலோடு "எந்த மகள்?" என்ருன்.

அம்மாது:—"என் முதல் புத்திரி-கற்பகம் என்று அவளுக்குப் பெயர் வைத்திருக்கிருர்கள். ஓ என் அருமை மகளே! என் கண்ணே! அவள் எங்கிருக்கிருள்?" என்ருள்.

ஆனந்தவஸிங் "அவள் க்ஷேமமாய் மனேன்மணியோடு கூட விருக்கிருள். அவளும் தேவ கன்னிகையைப் போன்ற பரிசுத்த நடக்கையும் குணமும், அழகு முடையவள்" என்ருன்.

அம்மாது:—"ஓ ஐயா! உமது உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன். நீர் என் துயரத்தை யொழித்தீர். இவ்வுலக வாழ்க்கையில் எனக்குப் புதிய ஆனந்தத்தையும் சுக வாழ்வையும் உண்டாக்கினீர்" என்ருள்.

ஆனந்த:—நீர் எனக்கு வந்தனமளிக்க வேண்டிய விஷயமேயில்லை. எனக்குரிய சரியான பரிசு எனக்குக் கிடைத்துவிட்டது.

அம்மாது புத்தகத்தை மறுபடியும் வாசித்து "ஓ ஆண்டவனே என்மேல் எவ்வளவு கருணை காட்டினீர். மனேன்மணி என் இரண்டாவது புத்திரியே. எனக்கு அவள்மேல் இருந்த வாஞ்சையாலேயே அது எனக்குச் சந்தேகமாகவே யிருந்தது" என்ருன்.

ஆனந்தவஸிங் "கற்பகம் வயதில் மனேன்மணியைவிட முதிர்ந்திருந்தாலும் இருவரும் சந்தித்தவுடனே அவர்களுக்குள் உண்டான அன்பினுலும்' அவர்கள் முக ஒற்றுமையாலும் நான் முன்னமே அப்படித்தான் சந்தேகித்தேன். அவர்களிருவரையும் ஏககாலத்தில் ஒருவன் கண்டால், இருவரும் சகோதரிகளென்று தெரிந்து கொள்வான், உனக் கெப்படி இதெல்லாம் தெரிந்தது? இப்புஸ்தகம் அவளுடைய தினசரி சரித்திரமோ?" என்ருன்.

---

அறவாழ்வில் ஆசையுள்ளவன் சத்தியத்தைச் சார்ந்து நிற்க, அவனுக்குத் துக்கம் தொலைவது அப்பொழுதுதான். அதற்கு முன்னான்று.

அம்மாது:—"ஆம். அவள் அப்போதைக் கப்போது பார்த்து சந்தோஷப் படுவதற்காக எல்லாச் சங்கதிகளையும் கிரமமாய் எழுதிவைத்திருக்கிறாள். இந்த இரகசிய பாஷை நாங்க ளிருவரும் பாடசாலையில் வாசிக்கும்போது ஏற்படுத்திக்கொண்டது. அப்படிச் செய்வது வழக்கம். அவளே விஷம் கொடுத்து என் கணவனுகிய ஜெயராமனைக் கொன்றாள். ஹே கடவுளே! மிக்க சந்தோஷத்தோடு அதைப்பற்றி இதில் எழுதி வைத்திருக்கின்றாள். அவள் என் முதல் குழந்தையாகிய கற்பகத்தைக் கொன்றுவிட்டதாய்க் கூறி யதும், இரண்டாவது குழந்தையை மாற்றி விட்டதாய்க் கூறியதும் யாவும் பொய். என் இரண்டாவது குழந்தை நான் பெற்றதல்ல என்ற எண்ணத் தால் அதை நான் பட்சமின்றி நடத்துவே னென்றும் அதைக்கண்டுதான் சந்தோஷ மடையலாமென்றும், இவ்வாறு என் ஆயுள் முழுமையும் நான் நீங்காத் துயரத்தை யனுபவிக்க வேண்டுமென்பதுமே அவள் கோரிக்கை. ஆனல் கடவுளருளால் எனக்கு எப்படியோ அக்குழந்தைமேல் பூரண அன்பே யுண்டாய் விட்டது. அவள் குழந்தைகளை மாற்றியபோது நான் மிக்க அசௌக்கியமா யிருந்தபடியால், பின்னல் பார்த்தபோது இது நாம் பெற்றதென்றும் அவள் மாற்றிவிட்ட குழந்தையென்றும் அறிந்துகொள்ள எனக்குச் சக்தியில்லை. ஐயா! என் மக்களை என்னிடம் கொண்டுவந்து நீர் தான் விடவேண்டும்'' என்றாள்.

ஆனந்த:—யாரை? இருவரையுமா?

சுந்தரம்மாள்:—ஆம்; இருவரையும். எல்லா உண்மைகளையும் என் கணவருக்குக் கூறிவிடுகிறேன். யாவும் அறிந்தபின் என் கணவர் என்னைப் பூரணமாய் மன்னித்து விடுவார் என்று நான் நம்புகிறேன்.

ஆனந்த:—நீ நினைப்பது நல்ல யோசனையே. உடனே இருவரையும் கொண்டு வந்து சேர்க்கிறேன்.

சுந்தரம்:—மரகதம் சங்கதி யெப்படி. அவள் விஷயத்தில் எப்படி நடந்துகொள்ளப் போகிறாய்?

ஆனந்த:—அவளைக் கடவுளே தண்டித்துவிட்டார். அவள் யாரோடு சேர்ந்து இப்படுமோசமான யோசனை செய்தாளோ அவர்களே இரவு அவளைக் கொன்றுவிட்டார்கள். மற்றபேர் தக்க தண்டனை யடைவார்கள். உன் சரித்திரம் எள்ளளவும் வெளிவராது. என்னைப் பூரணமாய் நம்பு.

---

கண்ணிய புருஷனைக் கணித்து அறியப் பல சோதனைகள் உள. அவைகளில் ஒருபொழுதும் தவறாத சோதனை ஒன்று உண்டு. அது தனக்குக் கீழ்ப் பட்டவர்களிடம் தன் சக்தியை எவ்விதம் உபயோகிக்கின்றான் என்பதே.




**பிரான்ஸ் தலைவரின் புதிய நாகரிகம்:—**

புதிய பிரான்ஸ் குடியாட்சித் தலைவர் திரு. எம். டூமர் என்பவர். அவர் தலைவராக வந்ததும் பிரான்ஸில் ஒரு புதிய நாகரிகத்தைப் பரப்பிவருகின்றார். இப்பொழுது அவர் தனது தாடியை சதுர வடிவமாகக் கத்தரித்துக் கொண்டிருக்கின்றார். இவ் வழக்கம் ராஜிய முறையிலும், சமுதாய முறையிலும் வெகு தீவிரமாகப் பரவி வருகின்றது. இவரைப்போல் குடியாட்சி சபையின் அங்கத்தினர்களும் தமது தாடியை சதுர வடிவமாக வெட்டிக் கொள்கின்றனர். இதனாலேயே நாட்டில் ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டிருக்கின்றது. இதை அவர்கள் "குரு சர்ஸ்" அல்லது "பாடலும் நடனமும்" என்று அழைக்கின்றனராம்.

நாட்டிலேயே புதிய மாறுதல் ஏற்படின் வாழ்க்கையில் மாறுதல் அவசியம் என அவர்கள் நினைக்கின்றனர் போலும்.

* * *

**"வாசனைத்தூ"ளினால் உண்டான விபத்து:—**

சிலநாட்களுக்கு முன் ஒரு சினிமா நடிகப் பெண்ணுக்குத் திடீரென ஜுரம் உண்டாகி விட்டதால் ஆட்டம் தடைபெற்று விட்டதாம். அதற்குக் காரணம் அம்மாது வழக்கமாக உபயோகிக்கப்படும் வாசனைத்தூளுக்குப் பதிலாக புதிய மாதிரியான வாசனைத் தூளை முகத்தில் பூசிக் கொண்டதாகவும், அதனால்தான் தனக்கு இவ்விதமாகத் திடீரென ஜுரம் வந்ததாகவும் தெரிவித்தாராம். அப்பொழுது டாக்டர்கள் பரீக்ஷை செய்தும் பயன் படவில்லையாம். உடனே தான் முன் உபயோகித்த வாசனைத் தூளை முகத்தில் பூசிக்கொண்டு வந்ததால் குணமடைந்து இப்பொழுது சினிமா படக்காட்சியில் கலந்து கொள்கிறாராம்.

* * *

**படம் பிடிக்கும்பொழுது ஏற்படும் விபத்துகள்:—**

சென்ற ஐந்தரை வருடங்களில் "ஹோலிவுட்" படமெடுக்கும் கம்பெனியில் 10,794 பேர்கள் விபத்துக்களுக் காளானார்களென்றும், 55 பேர்கள் மரணமானார்களென்றும் தெரிய வருகின்றது. அக் கம்பெனியார் இதுவரை 80,000 பவுன் செலவழித்தனர். அதில் 50,000 பவுன் இறந்தவர்களின் பந்துக்களுக்கு நஷ்ட ஈடாகக் கொடுத்திருக்கின்றனர். மீதி 30,000 பவுன்கள் சம்பள வகையறாவில் செலவழிந்துள்ளது. இளஞ் சிறுமிகள் புகைப்படக் காட்சியில் ஈடுபடுவதால் அவர்களுக்குக் கொடிய வியாதி உண்டாகின்றது. படமெடுக்கும் கம்பெனியால் நாள் ஒன்றுக்குப் பதினைந்து விபத்துக்கள் நேருகின்றன.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

**பிரஜோற்பத்தி௵ புரட்டாசீ௴—கலியுகாதி 5033, சாலிவாகனம் 1854,**
**பசலி 1341, கொல்லமாண்டு 1107, ஹிஜரி 1350,**
**இங்கிலீஷ் 1931௵ செப்டம்பர௴—அக்டோபர௴**

| புரட்டாசி | செப்டம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | [சீதி புண்யகாலம் |
| 1 | 17 | வியா | சஷ்24-33 | அனு41-23 | சி41-23பி | சஷ்டி, சூரிய சஷ்டி, ஷட |
| 2 | 18 | வெ | சப்21-25 | கே40-30 | ம40-30அ | அமுக்தாபரண சப்தமி |
| 3 | 19 | சனி | அஷ்19-58 | மூல41-23 | சித்60 | நந்த நவமி, அதுக் நவமி |
| 4 | 20 | ஞா | நவ20-18 | பூரா43-55 | சி43-55அ | குளம் கிணறு வெட்ட |
| 5 | 21 | திங் | தச22-13 | உத்47-55 | ம47-55அ | கஜலக்ஷ்மி விரதம் |
| 6 | 22 | செவ் | ஏகா25-30 | திரு53-13 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 7 | 23 | புதன் | து30-5 | அவி59-33 | பி59-33சி | கல்கி துவாதசி,வாமன ஜய |
| 8 | 24 | வியா | திர35-30 | சத60 | மர60 | பிரதோஷம் [ந்தி |
| 9 | 25 | வெ | சது41-35 | சத6-38 | சித்60 | அனந்த விரதம் |
| 10 | 26 | சனி | ப○48-5 | பூர14-13 | மர14-13சி | சந்திர கிரஹணம் |
| 11 | 27 | ஞா | பிர54-35 | உத்22-18 | அமி60 | மாளயபக்ஷ ஆரம்பம் |
| 12 | 28 | திங் | துதி60 | ரே29-50 | சித்60 | அசூன்யசயன விரதம் |
| 13 | 29 | செவ் | துதி0-58 | அஸ்37-10 | சித்60 | |
| 14 | 30 | புத | திரி6-50 | பர43-55 | சி43-55அ | |
| 15 | அக்டோபர் 1931௵ 1 | வியா | சது11-53 | கி✱49-48 | மர60 | |
| 16 | 2 | வெ | பஞ்15-50 | ரோ54-28 | மர54-28சி | |
| 17 | 3 | சனி | சஷ்18-20 | மிரு57-35 | சித்60 | |
| 18 | 4 | ஞா | சப்19-15 | திரு58-58 | சித்60 | |
| 19 | 5 | திங் | அஷ்18-23 | புன58-35 | அ58-35சி | |
| 20 | 6 | செவ் | நவ15-43 | பூச56-25 | சித்60 | |
| 21 | 7 | புத | தச11-20 | ஆயி52-38 | சித்60 | |
| 22 | 8 | வியா | ஏகா5-25<br>து58-10 | மக47-20 | அ47-20சி | |
| 23 | 9 | வெ | திர49-43 | பூர41-8 | சித்60 | மகத் திரயோதசி [விரதம் |
| 24 | 10 | சனி | சது40-43 | உத்34-8 | மர60 | மாச சிவராத்திரி, கேதார |
| 25 | 11 | ஞா | அ●31-25 | அஸ்26-50 | அ26-50சி | மாளய அமாவாசை |
| 26 | 12 | திங் | பிர22-20 | சித்19-43 | பி19-43அ | நவராத்திரி ஆரம்பம் |
| 27 | 13 | செவ் | துதி13-40 | சுவா12-55 | சி12-55மர | தானியம் அறுக்க |
| 28 | 14 | புத | திரி6-0<br>சது59-38 | விசா7-13 | சித்60 | மாச சதுர்த்தி விரதம்,<br>10க்குள் மழை,அவமாகம் |
| 29 | 15 | வியா | பஞ்55-0 | அனு2-45 | சித்2-45பி | கரிநாள், லலிதா பஞ்சமி |
| 30 | 16 | வெ | சஷ்52-20 | கேட்0-3<br>மூல59-10 | மர0-3அமி | சஷ்டி, சரஸ்வதி ஆவாஹ<br>னம், அவமாகம் |

| | | | |
|---|---|---|---|
| ராகு | | | |
| | 14-கன்-புத<br>22-துலா-சுக் | | குரு |
| | | | புத |
| சனி | | செவ் | சூ-சு<br>கே |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.